# வள்ளல் சண்முகனார்

முறைசைகிழார்
அரங்க சீனிவாசன்

பிரகாஷ் பதிப்பகம்

"தாதா கோடிக்கு ஒருவர்" என்றார் ஔவை. வள்ளல் சண்முகனார் பல கோடியில் ஒருவராக வாழ்ந்தவர். "பிறக்கும்பொழுது கொண்டு வந்தது, இல்லை" உண்மை தான். ஆனால், இறக்கும் பொழுது புகழைக் கொண்டு செல்ல முடியுமே! என்று துணிந்து அப்புகழைஈட்டிய பெருமகனாக வாழ்ந்தார் சண்முகனார். சிந்திக்கிடந்த செல்வங்களாம் செய்யுட் களையெல்லாம் பெருமுயற்சி யால் திரட்டி "தனிச் செய்யுட் சிந்தாமணி" யாகச் சண்முகனார் தந்தார். இந்திரபோகத்தில் வாழ்ந் தாலும் செந்தமிழை உயிர் மூச்சாகக் கருதினார் சண்முகனார். பன்னூறு புலவர்களை ஆதரித்துப் பல பல பயனுள்ள நூல்களை யாக்கித் தமிழன்னைக்குப் புனைவித்துப் பொலிவு பெறச் செய்தார் சண்முகனார். இந்தப் பெருவள்ளலின் வாழ்க்கை வரலாற்றைச் சுவைபட எடுத்துக் கூறு கிறது இந்நூல்.

பிரகாஷ் பதிப்பக எண்—5

# வள்ளல் சண்முகனார்

(வாழ்க்கை வரலாறு)

2563

733

எழுதியவர்கள் :

முறைசைகிழார்

கவிஞர் அரங்க சீனிவாசன்



வெளியீடு :

பிரகாஷ் பதிப்பகம்

நிர்வாகமும் பொறுப்பும் :

பிரபஞ்ச ஜோதி பிரசுராலயம்

புதுக்கோட்டை —:— திருச்சி மாவட்டம்

# முன்னுரை

தமிழைப் பாதுகாக்கத் தலைவர்கள் ஏற்படாத காலத்தில் வள்ளல் சண்முகனார் வாழ்ந்தார்; அரசியலும். மொழியும் சம்பந்தாசம்பந்தமற்றிருந்த காலத்தில் சண்முகனார் திகழ்ந்தார்; வறுமையும் புலமையும் சேர்ந்து இணைந்து இருந்ததைப் பிரிக்கச் சண்முகனார் பிறந்தார்; தமிழன்னை வளம் கொழிக்கத் தம் செல்வமெல்லாம் இழந்தார். இதை விதி வசமென்று நினைக்கிறீர்கள்? இல்லை, தமிழ் வளரச் சண்முகனார் ஒரு பலிபீடமாகத் தம்மை அமைத்துக்கொண்டார் என்று கருதுகிறீர்களா? வருங்காலம் எப்படி வேண்டுமானாலும் மதித்துக்கொள்ளட்டும் என்று நாம் இந்தச் சர்ச்சையை விட்டு விட்டு, அவர் வாழ்க்கை வரலாற்றிலுள்ள சுவையான பாகங்களைப் படம் பிடித்துக் காட்டுவதோடு நின்று விடுவோம்.

சண்முகனார் சரிதையை வரிவடிவமாக்க, அவர் அமரரான காலத்திலிருந்தே நான் முயன்றும், இப்பொழுதுதான் இறையருள் கூட்டி நிற்கிறது. நீண்ட நாட்களாக நான் சேகரித்து வைத்திருந்த குறிப்புக்களும், கேள்விப்பட்ட செய்திகளும், நான் நேரில் கண்ட சம்பவங்களும், என் நினைவைத் துளைத்துக் கொண்டிருந்த கருத்துக்களும் இப்பொழுதாவது பயன் பட்டதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

சண்முகனாரால் சிறப்படைந்தவை எத்தனை எத்தனையோ! அவர் மூதாதையர்கள், அவரை ஈன்ற சமூகம், அவர் பிறந்த ஊர், அதில் வாழும் மக்கள், அந்த வட்டாரம், அவ்வட்டாரத்தைச் சேர்ந்த மாவட்டம், அதைச் சேர்ந்த மாநிலம், அதைத் தாங்கி நிற்கும் மாபெரும் நாடு, சண்முகனாரின் தாய்மொழி, அதை வளர்த்த புலவர் கூட்டம் இன்னம் எவை எவையோ அவரால் சிறப்படைந்திருக் கின்றன.

வாழ்க்கை வரலாறு எழுதுவதில் மூன்று வகை உண்டு. தாமே தம் வரலாற்றை எழுதுவது ஒருவகை. இது சுயசரிதம் எனப்படும். பலர் எழுதிய பல நூல்களை ஆதாரமாகக் கொண்டு எழுதுவது மற்றொரு வகை. ஒருவரோடு தாமும் இணைந்து பழகி, அவரைப் பற்றி எழுதுவது வேறொரு வகை. இவற்றுள் இந்நூல் இறுதி வகையைச் சேர்ந்தது.

நான் சண்முகனாரின் சமகாலத்தவன்; அவர் பிறந்த ஊரில் பிறந்தவன்; அண்டை வீட்டில் வாழ்ந்தவன்; அவருடைய நடையும் கொடையும், வாழ்வும் தாழ்வும் நேரில் கண்டவன். ஆகையால், அவர் வாழ்க்கையில் எதிர்ப்பட்ட

பல செய்திகளைச் சேகரித்து வைத்திருந்தேன். அச்செய்திகளை ஆதாரமாகக் கொண்டு கவிஞர் அரங்க சீனிவாசனும், நானும் இந்நூலை உருவாக்கியுள்ளோம்.

சண்முகனாரால் ஆதரிக்கப்பட்ட புலவர்கள் பாடிய எண்ணிறந்த பாடல்கள் மட்டும் இன்றும் உள்ளன. ஆனால் அவற்றைப் பாடிய புலவர்கள் ஒருவர்கூட இன்றில்லை. சண்முகனாரை நேரில் கண்டு பழகிய முதியவர்களில் பெரும்பாலோர் மறைந்துவிட்டனர். அவரைச் சார்ந்திருந்த பஞ்சபூதங்களும் இன்று சாட்சி பகரா. ஆனால், அவர் வாழ்ந்த வட்டார மக்கள் அவர் வரலாற்றை வழிவழியாகக் கேட்டறிந்துள்ளனர். இன்றும் சரி, அவர் பெயரைக்கேட்டால் அம்மக்கள் உணர்ச்சி வசப்படுகின்றனர். அவர்களைச் சாட்சியாக வைத்து, அவர்களுக்கே—அவ்வட்டார மக்களுக்கே—இந்நூலை உரிமையாக்குகிறோம்.

இந்நூலை இயற்றுவதில் நானும், எனது நண்பர் அரங்க சீனிவாசனும் கூட்டுப் பொறுப்பேற்றுள்ளோம். என் சேகரிப்புக்களும், கருத்துக்களும், நானே எழுதிய சில பகுதிகளும் கவிஞர் அரங்க சீனிவாசன் அவர்கள் கைவண்ணத்தால் பொலிவுற்றிருப்பதைக் காணலாம். "புலவர் புரவலர்", "தனிச்செய்யுட் சிந்தாமணி" என்ற பகுதிகள் முழுமையும் படைத்த பெருமை அரங்க சீனிவாசனையே சேரும். இப் பகுதிகள் சண்முகனார் காலத்திய தமிழ் வளர்ச்சிக்குச் சிறந்த சான்றாக அமைந்துள்ளன.

பழம் பாடல்களைச் சந்தி பிரித்துப் பதிப்பிக்கவேண்டும்; சாமான்ய மக்களும் பாடற்சுவை அறிந்து மகிழவேண்டும் என்று திரு. அரங்க சீனிவாசன் கூறுவதுண்டு. இந் நூலில் இடம் பெற்றுள்ள பாடல்கள் அனைத்தும் திரு. அரங்க சீனிவாசன் அவர்களால் தொகுக்கப்பெற்று, சந்தி பிரிக்கப் பெற்றுள்ளன. இறுதியில் அனுபந்தமாகச் சேர்த்துள்ள பாடல்கள் சுவைத்துச் சுவைத்துப் படிக்கத்தக்கன.

இந்நூலின் படைப்புக்குக் காரணமாக யான் இருந்த போதிலும், புலமை மிக்க ஒருவர்—திரு. அரங்க சீனிவாசன்—என்னோடு பின்னிப் பிணைந்து, என் கருத்துக்கேற்ப, என் அமைப்பு முறைக்கேற்ப, எளிய நடையில், தெளிவான அழகான சொற்றொடர்களை அமைத்து, தமது கைவண்ணம் காட்டியுள்ளார். அதனால், இந்நூல் இறுதி வடிவம் பெறச் செய்ய எனக்கு எளிதாயிற்று. அவருக்கு என் நன்றி.

இருவர் கூடி ஒரு நூலை ஆக்குவதில் பல சிக்கல்கள் நேர்வதுண்டு. இருவருள்ளும் வயது, அனுபவம், தகுதி முதலியவற்றில் வேறுபாடு இருக்கலாம்; ஒருவர், விஷயத்தை நேரில் கண்டவராகவும், மற்றவர் அதை அப்போதுதான் கேள்விப்படுபவராகவும் இருக்கலாம்; ஒருவர் உணர்ச்சி வசப்படுவராகவும், மற்றவர் சிந்தித்து முடிவுக்கு வருபவராகவும் இருக்கலாம். இருவரும் ஒன்றாக இணைவதற்கு முதன்முதலில் கருத்தொற்றுமை வேண்டும்; ஒருவருக்கொருவர் மதிப்புத் தர வேண்டும்; விட்டுக்கொடுக்கும் தன்மை வேண்டும்; குறைநிறைகளைப் பகிர்ந்து கொள்ளும் பண்பு வேண்டும். இவற்றால் ஏற்படும் ஒருமைப்பாடே உயர்ந்த நூலை உருவாக்குகிறது. இம் முயற்சியில் நாங்கள் பெற்றுள்ள வெற்றிக்கு இந்நூல் சான்று பகரும்.

இந்நூலில் இடம் பெற்றுள்ள பாடல்களில் முறைசை, முறைசைநகர், முறைசைமாநகர், முறைசையம்பதி எனப் பல படக் கூறியவையனைத்தும் சண்முகனாரின் பிறப்பிடமான முறையூரையே குறிக்கும்.

கவிஞர் பெருமான் கம்பன் ஒருவனை மட்டும் ஆதரித்த பெருமைக்காக சடையப்பவள்ளல் இன்றும் போற்றப் பட்டு வருகிறார். சண்முகனாருடன் தொடர்பு கொண்ட புலவர் சிகாமணிகள் பதினெண்மர் இந்நூலில் இடம் பெற்றிருக்கின்றனர். நாம் காணாதவர் எத்தனை பேரோ! சங்கீத விற்பன்னர்கள் என்ன, நாடக நடிகர்கள் என்ன, ஆடலழகிகள் என்ன, சாலவித்தை — மோடிவித்தைக்காரர்கள் என்ன, இப்படி பலதுறை அறிஞர்களை ஆதரித்த பெருமையில் சண்முகனாருக்குப் பங்குண்டு என்று சொல்வது மிகையாகாது. சண்முகனாரின் கலைக்கோவிலில் எந்நேரமும் வித்வத் சதஸ் கூடிக் கொண்டிருக்குமென்பது பிரசித்தம். அதனால் சடையப்பரின் பரம்பரையில் வந்த சண்முகனார், இன்னும் பலபடி உயர்ந்து விட்டாரோ என்று சொல்லக்கூட நாம் ஆசை—பேராசை—கொள்ள நினைக்கிறோம். இந்நூலின் உள் நுழைந்து நுகரும் வாசகர்களும் இதை ஒப்புவார்கள் என்றே கருதுகிறோம்.

முறையூர்
26—1—1965

முறைசைகிழார்

## பதிப்புரை

வள்ளல் சண்முகனாரின் வாழ்க்கை வரலாற்றைத் தமிழரறிய செய்த பேறு கிடைத்ததற்கு பெருமிதங் கொள்கிறோம்.

இவ்வாழ்க்கை வரலாற்று நூலை அற்புதமாக ஆக்கித் தந்த இந்நூலாசிரியர்கள் திரு. முறைசைகிழாருக்கும், கவிஞர் திரு. அரங்க சீனிவாசனுக்கும் பிரகாஷ் பதிப்பகத்தின் சார்பாக உளங்கனிந்த நன்றி.

பிரகாஷ் பதிப்பகம்

# பொருளடக்கம்

———



தலைப்பாகையுடன், மேல் நாட்டு உடையில்
**வள்ளல் சண்முகனார்**

# 1. கோடிக்கு ஒருவர்

> "வண்மையிலே, உளத் திண்மையிலே, மனத்
> தண்மையிலே, மதி நுண்மையிலே,
> உண்மையிலே, தவறாத புலவர்
> உணர்வினிலே உயர் நாடு"

என்று நம் நாட்டைப் பாடினான் பாரதி. வண்மை என்பது நம் நாட்டோடு இயைந்த பண்பு. பொன்னும், பொருளும் வாரிவாரி வழங்கி வான் புகழ் கொண்டவர் நம் முன்னோர். நில்லாத பொருளைக்கொண்டு நிலையான புகழை-இன்பத்தை-அடைய முயன்றவர் நம் ஆன்றோர். உயிர் கொடுத்தும் உயர்வு காத்தவர் நம் மூதாதையர்.

### கருணன்

கருணனுடைய புகழ் நிலைத்து நிற்பது அவன் கொடைத் திறத்தால் அன்றோ? "ஆவியோ நிலையில் கலங்கியது; அது ஆக்கை அகத்ததோ? புறத்ததோ?" என்று அறியமுடியாத தருணத்திலும், கண்ணபிரானுக்கு வேண்டியதை வழங்கிய வண்மையினால், மாயாப் புகழ் கொண்டான் அவன். அவன் உயிர் பிரியும் நிலையிலே, "உனக்கு வேண்டிய வரம் கேள்; தருகின்றேன்" என்று கண்ணபெருமான் வினவியபோது, "ஏழெழு பிறப்பிலும் 'இல்லை' என்று இரப்போர்க்கு, 'இல்லை' என்று உரையா இதயம் ஈந்தருள்" என்றே கேட்கின்றான். கருணன் பெயரைச் சொன்னதுமே அவன் கொடைதான் நம் நினைவுக்கு வருகிறது.

### கடை எழுவள்ளல்கள்

தமிழ்நாடு வள்ளன்மையின் பிறப்பிடம். தமிழ் இலக்கியங்கள் முழுவதும் வள்ளல்களின் கொடைத் திறத்தால் எழுந்தனவே. சங்க நூல்களிலே பாராட்டப்பெறும் வள்ளல்கள் பலர். அவருள்,

—சிறுவீமுல்லேக்குப் பெருந்தேர் நல்கினுன் பாரி!
—கான மயிலுக்குப் பொன்னுடையைப்
போர்த்தினுன் பேகன்!
—புரவியும், பூமியும், இன்சொல்லும் இரவலர்க்கு
ஈந்தான் காரி!
—நாகம் நல்கிய நீலஆடையை ஆலமர்
செல்வனுக்கு அளித்தான் ஆய்!
—அமிழ்து விளே தீங்கனியை அவ்வைக்கு
ஈந்தான் அதிகன்!
—அள்ளி அள்ளி அளித்தான் நள்ளி!
—வாரி வாரி வழங்கினுன் ஓரி!

இவர்கள் கடையெழுவள்ளல்கள் என்று பாராட்டப் பெறுகின்றனர்.

## பிற வள்ளல்கள்

"தன்தலேக்கு விலேவைத்துள்ளான், தம்பி" என்பதறிந்து, தமிழ்ப்புலவர்க்குத் தலேயையே தரத்துணிந்தான் குமணன்!

"புலவர்க்குத் தரப் பொருளில்லேயே! என் செய்வேன்! இனி உயிர் தரித்து யாது பயன்?" என்று ஏங்கி பாம்புப் புற்றிலே கைவிட்டான் காளத்தி!

கவியரசர் கம்பநாடரை ஆதரித்து, கம்ப காவியத்தைத் தமிழர்க்குத் தந்து, தமிழ் உள்ளளவும் வாழ்கின்ருன் சடையப்பன்.

"எத்தாழ்ச்சி வரினும், ஈகையைக் கைவிடேன்" என்று வாழ்ந்தார் பெத்தாச்சி என்ற செட்டிநாட்டு வள்ளல்.

''கொடையாலே வறுமைதான் மிஞ்சும் என்றால்,
கோடிகொடுத் தேனும்அதைப் பெறுவோம்' என்று
கிடையாத பெருஞ்செல்வம் கிடைத்த எல்லாம்
கேட்டுவந்த புலவருக்கு வாரித்தந்து,
அடையாத நெடுங்கதவும், யார் வந்தாலும்,
'அஞ்சேல்' என்று உரைக்கின்ற இனித்த சொல்லும்
உடையாராய்த், தமிழ்வாழ வாழ்ந்திருந்த
உத்தமர்கள்பெருமைதனை உரைக்கலாமோ?''

இத்தகைய புரவலர்களை எண்ணும்போது மேற்கண்ட பாடல் நம் நினைவுக்கு வருகிறது.

## ஆக்கத்தால் வந்த புகழ்

கோபுரங்கள் எழுப்பிய கொற்றவர்கள் பலர்; மாளிகைகள் கட்டிய மன்னர்கள் அனேகர்; தண்டெடுத்து மண்டலம் வென்ற தானைத் தலைவர்கள் கணக்கிலர்; விண்தொடுத்த இமயத்தில் வெற்றிக்கொடி நாட்டியவர் ஏராளம்; தெண் திரைக்கடல் கடந்து திக்குவிசயம் செய்தவரும் ஒரு கோடி. ஆயினும், இவர்கள் பெருமையைவிட கொடையால் உயர்ந்தவர் பெருமையே வரலாற்று ஏடுகளில் அழியாத இடம் பெற்றுள்ளது. படைதந்த புகழ் அழிவால் வருவது; கொடைதந்த புகழோ ஆக்கத்தால் வருவது.

"உள்ளி உள்ளவெல்லாம் உவந்து ஈயும் அவ்வள்ளியோர்" மரபிலே வந்தவர் வள்ளல் சண்முகனார். இந்த நூற்றாண்டின் முற்பகுதியிலே வாழ்ந்தவர் அவர். ஈட்டிய பொருள் அத்தனையும் கேட்டவர்க்கெல்லாம் வழங்கி, வறுமை பெற்றும் வான்புகழுற்றவர் அவ்வள்ளல்.

## தாதா கோடிக்கு ஒருவர்

" தாதா கோடிக்கு ஒருவர் " என்றார் ஔவை. நமதுசண்முகனாரோ,பலகோடியில் ஒருவராக வாழ்ந்தார். 'பிறக்கும்பொழுது கொண்டுவந்தது இல்லை.'

உண்மைதான். ஆனால், இறக்கும்பொழுது புகழைக் கொண்டுசெல்ல முடியுமே!'' என்று துணிந்து அப்புகழை ஈட்டிய பெருமான் சண்முகனார்.

வண்மையிலும் உள்ளத்திண்மையிலும் மனத்தின் தண்மையிலும் மதி நுண்மையிலும் உண்மையிலும் தவருமல் வாழ்ந்து புலவர் உணர்வினில் உயர்ந்துநின்று, நிலைபெற்றவர் அவர். வண்மைப் பயிர் விளையும் தமிழ்மண்ணுக்குக் கண்மணிபோன்று விளங்கும் செட்டிநாட்டில் தோன்றியவர் வள்ளல் சண்முகனார்.

சிந்திக் கிடந்த தமிழ்ச் செல்வங்களாம் செய்யுட்களையெல்லாம் பெருமுயற்சியால் திரட்டி, "தனிச் செய்யுட் சிந்தாமணி" யாகத் தந்தவர். இந்திர போகத்தில் வாழ்ந்தாலும், செந்தமிழை உயிர் மூச்சாகக் கருதினர். பன்னூறு புலவர்களை ஆதரித்துப், பலபல பயனுள்ள நூல்களை யாக்கித் தமிழன்னைக்குப் புனைவித்துப் பொலிவு பெறச் செய்தார்.

தமிழுக்குத் தொண்டுசெய்த வள்ளல் அவர்களின் வரலாற்றைத் தெரிந்து வாழ்த்துவது நம் கடமை. "நன்றி மறப்பது நன்றன்று" அல்லவா ?

# 2. வள்ளல் மரபினர்

## பாண்டி நாடு

"வெம்மையால் விளைவு அஃகினும், வேந்தர்கோல் கோடிச்
செம்மை மாறினும், வறுமை நோய் சிறைந்கினும், சிவன்பால்
பொய்ம்மை மாறிய பக்தியும், பொலிவும் குன்றுவாய்த்
தம்மை மாறியும் புரிவது தருமம் அந் நாடு"

என்று பரஞ்சோதி முனிவரால் பாராட்டப் பெற்றது பாண்டிநாடு. வறட்சியால் விளைவின்றிப் போயினும், அரசர் கொடுங்கோலராக மாறினும், வறுமையால் நலிய நேரினும், அக்காலத்திலும் கூட, தம்மையே விலைக்கு விற்றாயினும் தருமம் புரிவர் பாண்டி நாட்டார் என்கின்றார் முனிவர். சென்ற காலத்தின் உண்மை அது தானே!

"காசின் வாய்க்கரம் விற்கினும்
கரவாது மாற்றிலி சோறு இட்டுத்,
தேச வார்த்தை படைக்கும் வன்கையினர்"

என்பது விண்டுசித்தராகிய பெரியாழ்வார் வாக்கு. ஒரு பொற்காசுக்கு ஒரு பிடி அரிசி விற்கின்ற பஞ்ச காலத்தில் கூட, இரப்பவர்களுக்கு முனைமுறியாத அரிசிச் சோறிட்டு, அதனால் நாடு புகழும் பெருமை பெறுகின்ற வள்ளன்மை படைத்த கையை உடையவர்கள் வாழ்வது பாண்டி நாடு.

## செட்டி நாடு

"பாண்டி நாடே பழம் பதி" என்பது பெரியோர் வாக்கு. இந்தப் பாண்டி நாட்டிலே செல்வமும், கல்வியும் விளையும் செய்யாய்த் திகழ்வது செட்டிநாடு.

‘ வெள்ளாறது வடக்காம்; மேற்குப் பிரான்மலையாம்;
தெள்ளார் புனல் வைகை தெற்காகும்;—ஒள்ளியசீர்
எட்டிக் கடல் கிழக்காம்; இஃதன்றே நாட்டரன்சேர்
செட்டி நாட்டு எல்லையெனச் செப்பு’’

என்ற பாடுவார் முத்தப்ப செட்டியார் வாக்குப்படி, நான்கு எல்லைகளையுடையது நகரத்தார் நாடு.

செட்டி நாட்டின் பெரும்பகுதி இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள திருப்பத்தூர், சிவகெங்கை வட்டங்களிலும், சிறுபகுதி திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த திருமெய்யம் வட்டத்திலும்பரவியிருக்கிறது.

தொண்ணூற்ருறு ஊர்களையுடையது செட்டி நாடு என்று கூறப்படினும், இன்று எண்பது ஊர்களில் மட்டுமே நாட்டுக்கோட்டை நகரத்தார் என்னும் வகையினர் வாழ்கின்றனர்.

## நாட்டுக் கோட்டையார்

செந்தமிழ் நாட்டிலுள்ள செட்டியார்களை வகைப் படுத்திஞல் முப்பதுக்கு மேற்பட்ட பிரிவினரைக் காணலாம். அவற்றுள் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் ஒரு வகையினர். இவர்கள் பல நூற்ருண்டுகட்கு முன்பு, சோழநாட்டுத் துறைமுகமாகிய காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து, பாண்டிய நாட்டில் குடியேறியவர்கள் என்று கர்ணபரம்பரைச் செய்திகள் கூறுகின்றன.

செட்டி நாட்டிலே பலவகை மக்கள் வாழ்ந்து வருகின்றனர். எனினும் நாட்டுக்கோட்டையார் மற்றவர்களைவிட மிகவும் செல்வாக்குடையவர்களாகத் திகழ்ந்து வருகின்றனர். “ திரைகடலோடியும் திரவியம் தேடு” என்ற பொன்மொழிக் கேற்ப, கடல்கடந்து சென்று, வாணிபத்தால்

பொருளீட்டி வந்து, வசதியான வாழ்வு வாழ்கின்றனர். வட்டிக்குப் பணம் கொடுத்து வாங்கும் வாணிபம் நடத்துவதனுல், இவர்கள் தனவணிகர் என்றும், தனவைசியர் என்றும் சிறப்பாக அழைக்கப்படுகின்றனர். இப்பெயர் இவர்களுக்கு இந்த நூற்ருண்டின் தொடக்கத்திலிருந்து தான் வழங்கி வருகிறது. அதற்கு முன்பு பொதுவாக வைசியர் என்றும் குறிப்பாக செட்டி என்றும் தான் அழைக்கப்பட்டு வந்தனர்.

இவர்கள் குடும்பங்களின் மொத்த எண்ணிக்கை சுமார் பதினையாயிரமும், மக்கள் எண்ணிக்கை சுமார் எழுபதிஞயிரமும் இருக்கலாம். ஒரு குடும்பத்தை ஒரு புள்ளி—தலைக்கட்டு—என்று குறிப்பிடுவது இவர்கள் வழக்கம்.

பதினேழாம் நூற்ருண்டு முதல் தென்கிழக்காசிய நாடுகளிலும், குறிப்பாக, இந்தோசீனு, தாய்லந்து, இந்தோனேஷியா, மலேயா, பர்மா, சிலோன் முதலிய பகுதிகளிலும், கல்கத்தா, பம்பாய் தூத்துக்குடி, சென்னை, நாகப்பட்டினம் முதலிய உள்நாட்டுத் துறைமுகப் பட்டினங்களிலும், தங்கள் தொழிலை நடத்தி வந்துள்ளனர். இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பிறகு, இந்தோனேஷியா, தாய்லந்து, இந்தோசைனு முதலிய நாடுகளில் தங்கள் தொழிலை நிறுத்திக்கொண்டு, மலேயா, பர்மா, சிலோன் ஆகிய நாடுகளில் மட்டுமே தொழில் நடத்தி வருகின்றனர். இன்று பர்மாவிலும் தொழில் அறவே நின்றுவிட்டது. சிலோனிலும் தொழில் சிறுகச் சிறுகக் குறைந்து கொண்டு வருகிறது.

## தெய்வப்பற்று

செல்லும் இடங்களிலெல்லாம் முருகனுக்கு ஆலயம் எடுத்து, விழாவெடுத்து, அவ்வாலயங்

களுக்குச் சொத்துக்களை எழுதிவைத்து, சொர்ண ஆபரணங்களைச் சாத்தி வழிபடுவது இவர்கள் வழக்கம். இவ்வகையில் இவர்கள் செலவழித்துள்ள தொகை பலகோடிகளாகும்.

தமிழகத்தில் சிவாலயங்களை அமைத்து வந்த இவர்கள் வெளிநாடுகளில் முருகன் ஆலயமே பெரும்பாலும் அமைத்துள்ளனர். இவர்கள் முதன் முதலில் நாகப்பட்டினத்திலிருந்துதான் கப்பலேறி வெளிநாடுகளுக்குச் சென்றுள்ளனர். ஆதலால் நாகப்பட்டினத்திற்கு அருகிலுள்ள சிக்கல் முருகன் இவர்களை ஆட்கொண்டதில் வியப்பில்லை. அதோடு வெளிநாடுகளுக்குச் செல்லும்போது, பெண்டு, பிள்ளைகளை உடன் அழைத்துச் செல்லும் வழக்கம் இவர்களுக்கு முன்பு இல்லாமையாலும், தவவேடம் பூண்ட தண்டபாணி இவர்களைக் கவர்ந்துள்ளார் என்றும் கொள்ளலாமன்றோ ?

## தமிழ்ப்பற்று

எங்கு சென்றாலும் தம் தாயகத்தையும், தாய்த் தமிழையும் மறப்பதில்லை இவர்கள். சென்ற சென்ற நாடுகளிலெல்லாம் தம் தாய் மொழியாகிய தமிழிலேயே கணக்கு வைத்துக்கொள்வார்கள். தெய்வப் பற்றும் தேசப் பற்றும், மொழிப் பற்றும் இவர்கள் உடன் பிறந்தவை.

## கட்டிடக் கலைஞர்கள்

நாட்டுக் கோட்டையார், கட்டிடக் கலையில் சிறந்தவர்கள். தனியான இடங்களைத் தேர்ந்தெடுத்து, பெரிய பெரிய அரண்மனைகளைப் போல, மாளிகைகள் கட்டி வாழ்கின்றனர். பொறியியல் அறிஞர்களின் ஆலோசனைகளைப் பெருமலேயே, தாமாகவே, தமது அனுபவத்தைக் கொண்டு பெரிய பெரிய மாளிகைகளைக் கட்டிக் கொள்ளும் திறமை இவர்களுக்கு உண்டு.

## தான தருமம்

இன ஒருமைப்பாடு இவர்களிடம் அதிகம். மற்ற மற்ற வணிகர்களைப்போலவே பொருளீட்டுவதிலும், ஈட்டிய பொருளைப் பேணிப் பாதுகாப்பதிலும், இவர்கள் கண்ணும் கருத்துமாக இருப்பினும், தான தருமம் செய்வதில் பெருவிருப்பம் இவர்களுக்கு உண்டு. தானமும், தருமமும்தாம் தமது செல்வ வளர்ச்சிக்கு உறுதுணையானவை என்று நம்புபவர்கள் இவர்கள்.

## கோயில் திருப்பணி

தமிழகமெங்கணுமுள்ள பழங்கால ஆலயங்களைச் செப்பனிட்டு, ஓங்கி உயர்ந்த கோபுரங்களை ஒளிவீசச் செய்துள்ளனர். கோவில் திருப்பணி செய்வதில் இவர்களுக்குள் ஏற்பட்ட போட்டியினால் ஒருகாலத்தில் "இனிச் செப்பனிடக் கோயில்களே இல்லை" என்ற நிலைகூட ஏற்பட்டது என்று கூறப்பட்டதுண்டு. இத்தகைய அறச் செயல்களுக்காக இவர்கள் செலவிட்டிருக்கும் தொகை பல நூறுகோடிகளாகும். இவர்களைப் போல அறச்செயல்களைச் செய்த வகையினரை வரலாற்றிலே காண்பது அரிது.

இவர்கள் பெரும்பாலும் சைவ ஆலயங்களையே கட்டிவந்தாலும், அநேக வைணவ ஆலயங்களையும் கட்டிமுடித்துள்ளனர்.

இன்று பள்ளிகளையும், பல்கலைக்கழகங்களையும், மருத்துவமனைகளையும், வாசகசாலைகளையும் கட்டுகின்ற புதுத்திருப்பத்தில் முனைந்துள்ளனர். ஆக, தருமம் செய்வதையே கருமமாகக் கொண்டவர்கள் ஆகையால், காலத்திற்கேற்றபடி தருமங்களும் மாறுதலடைந்து, அத்தருமங்களுக்கு ஏற்ப இவர்களும் தம்மை அர்ப்பணித்துக் கொண்டுள்ளனர்.

## தமிழ் மரபுக்கேற்ற கோத்திரப் பிரிவு

தமிழகத்தில் வாழும் மற்ற செட்டியார்களாகிய ஆரிய வைசியர், ஆயிரம் வைசியர், வணிக வைசியர், தேவாங்கச் செட்டியார்கள் போன்று, வடநாட்டுப் பாணியில் ரிஷிகள் பரம்பரையிலிருந்து வந்தவர்க ளென்று, நாட்டுக்கோட்டை செட்டியார்கள் தங்களேக் கூறிக்கொள்வதில்லே. கோத்திரங்களேயும் ஆயிரக்கணக்கில் அமைத்துக்கொள்வதில்லே. ஆரிய வைசியர் (கோமட்டியார்) எழுநூற்றுப் பதிநாலு கோத்திரங்களேயும், ஆயிரம் வைசியர் (காசுக்கார ரோடு இணேந்த இருபது வகையினர்) ஆயிரம் கோத்திரங்களேயும், வணிக வைசியர் (வாணியர்) மற்ஞெரு ஆயிரம் கோத்திரங்களேயும், தேவாங்கச் செட்டியார்கள் பதினுயிரம் கோத்திரங்களேயும் ஏற்படுத்திக் கொண்டிருப்பது கண்கூடு. ஆனுல் நாட்டுக்கோட்டை நகரத்தார், அவர்கள் வாழும் எல்லேக்குள், ஒன்பது ஊர்களேத் தேர்ந்தெடுத்து, அதில் ஒன்பது சிவன் கோவில்களே நிர்மாணித்து அந்த ஊர்களே தலேப்பாகக்கொண்ட கோயில் பிரிவுகள் என்ற பெயரால் தம் கோத்திரங்களே அமைத்துக் கொண்டிருக்கின்றனர். மக்கள் பெருக் கத்திற்கேற்ப அது இருபத்து மூன்று பிரிவுகளாக ஆக்கப்பட்டுத் திகழ்கிறது.

## கோயில் பிரிவுகள்

இவர்கள் ஆதியில் குடியேறிய ஏழு ஊர்களே யொட்டி, ஏழு கோயில் பிரிவுகள் என முதலில் ஏற்பட்டுள்ளன. இதனுல் ஏழ்நகரார், ஏழூர் வணிகர் என்று இவர்கள் அழைக்கப்பட்டனர். பின்னர் இவ் ஏழு பிரிவுகளில் ஒன்ருகிய இளேயாத்தன்குடி என்னும் பிரிவில் மேலும் இரு பிரிவுகள் தோன்றி, ஒன்பது கோயில் பிரிவுகள்

ஏற்பட்டன. அவை, 1. மாற்றூர், 2. இளையாத்தன்குடி, 3. வயிரவன்பட்டி, 4. பிள்ளையார்பட்டி, 5. இரணியூர், 6. இலுப்பைக்குடி 7. நேமம், 8. சூரக்குடி, 9. வேலங்குடி என்பனவாகும். இந்த ஒன்பது பிரிவுகளுக்கும் அந்தந்தப் பிரிவு நகரத்தார்களால் கட்டப் பெற்ற ஒன்பது கோவில்களும் அந்தந்த பிரிவு நகரத்தார்களின் பொதுப் பணத்திலிருந்து கட்டப் பெற்று அவர்களின் தனிஉடமையாக இருந்து வருகின்றன.

## உட்பிரிவுகள்

இந்த ஒன்பது கோயில் பிரிவுகளில், இளையாத்தன்குடிக் கோயிலும், மாற்றூர்க் கோயிலும், முறையே ஏழு, ஏழு உட்பிரிவுகளாகவும், வயிரவன் கோவில் மூன்று உட்பிரிவுகளாகவும் பிரிந்துள்ளன. உட்பிரிவுகளைப் பழங்கால முறைப்படி உடையார், குடையார், கொடையார், ஊரார், என அழைக்கின்றனர். இளையாத்தன்குடிக் கோவில் உட்பிரிவுகள்: 1. ஒக்கூருடையார், 2. பட்டணம் சாமியார், 3. பெருமருதூருடையார், 4. கழனிவாசற்குடையார், 5. கிங்கிணிக்கூருடையார், 6.பேரசெந்தூருடையார் 7. சிறுசேத்தூருடையார் எனவும், மாற்றூர்க் கோயில் உட்பிரிவுகள்: 1. உறையூரார், 2. அரும்பாக்கூரார், 3. மணலூரார், 4. மண்ணூரார், 5. கண்ணூரார், 6. கருப்பூரார், 7. குளத்தூரார் எனவும், வயிரவன் கோயில் உட்பிரிவுகள்: 1. சிறுகுளத்தூரார், 2. கழனிவாசல், 3. மருதேந்திரபுரத்தார் எனவும் வழங்கி வருகின்றன.

உட்பிரிவுகளையுடைய இளையாத்தன்குடி, மாற்றூர், வயிரவன்கோவில் ஆகிய இம்மூன்று

கோவில்களின் பெயரால் கோத்திரங்கள் வழங்கி வரினும், இவற்றின் உட்பிரிவுப் பெயர்களைக் கொண்டே சரியான கோத்திரங்கள் வரையறுக்கப் படுகின்றன. உட்பிரிவுகளில்லாத மற்றக்கோயில்கள் ஆறும் தத்தம் கோவில் பெயரால் கோத்திரங்களாக வழங்கி வருகின்றன. மாற்றூர்ப் பிரிவுகள் ஏழும், இளையாத்தான்குடிப் பிரிவுகள் ஏழும், வயிரவன்கோவில் பிரிவுகள் மூன்றும், உட்பிரிவுகள் இல்லாத கோயில்கள் ஆறும் ஆக மொத்தம் இருபத்துமூன்று பிரிவுகள் இவர்களுக்குள் உண்டு.

தங்களுக்குள் கொள்வன, கொடுப்பன தாராள மாக நடத்திக் கொள்வதற்காகவே இப்படிப் பல உட்பிரிவுகளை ஏற்படுத்திக் கொண்டுள்ளனர். ஒரே உட்பிரிவினர் தங்களுக்குள் கொள்வன, கொடுப்பன செய்து கொள்ளக் கூடாது. பிற பிரிவினருடன் தான் செய்துகொள்ள வேண்டும். ஆனால் இரணியூர் கோவிலாரும், பிள்ளையார்பட்டி கோவிலாரும் சகோதரர்களின் வமிசத்தாராகையால் தமக்குள் திருமண உறவு வைத்துக் கொள்வதில்லை.

நகரத்தார்கள் வேற்று நாட்டில், வேற்றூரில் வாழ்ந்தாலும், தங்கள் திருமணங்களையும், சிறுவர், சிறுமியர்க்குச் செய்யும் மதச்சடங்குகளையும் தமது சொந்த ஊரிலேயே வைத்துக் கொள்கின்றனர். பிள்ளையில்லாதவர்கள் சுவீகாரம் செய்ய நேர்ந்தால், சககோத்திரத்தில் தான் சுவீகாரம் எடுத்துக் கொள்ள வேண்டும் என்பது விதி.

## மாற்றூர்க் கோவில்

இந்த ஒன்பது கோயில்களிலும், புள்ளிகள் தொகையாலும், காலத்தாலும் முதன்மை பெறுவன மாற்றூரும், இளையாத்தன்குடியுமே ஆகும். இவ் இரண்டிலும் கூட புராணச் சிறப்புடையது மாற்றூர்க் கோயிலேயாகும்.

திருப்புவனத்துச் சித்தராகிய மாதவ முனிவர் என்ற ரசவாதி ஒருவர், ஐந்நூறு மாற்றுடைய பொன் உண்டாக்கி, அப்பொன்னுல், இறைவன் உரு அமைத்து, வழிபட்டார் என்பது மரபு. ஆகையால் இக்கோயில் இறைவன் ஐந்நூற்றீசன் ஆனுன். மாற்றூர்க்கோயிலைச் சேர்ந்தவர்களுக்கு ஐந்நூற்றுவர் என்ற பெயரும் உண்டு.

காரைக்குடியிலிருந்து மூன்றுகல் தொலைவில் உள்ள இலுப்பக்குடிக்கு அண்மையில் மாற்றூர் இருக்கிறது. இலுப்பக்குடியும் மாற்றூரும் தலபுராணங்களைப் பெற்றுள்ளன. இவ்விரு கோவில்களுக்கு உரிமையான நிலத்திலேயே வள்ளல் அழகப்பரின் கலைக்கல்லூரிகள் நிமிர்ந்து நிற்கின்றன.

மாற்றூர்க்கோவிலுக்கு ஏழு உட்பிரிவுகள் உண்டு என்று முன்பே தெரிந்து கொண்டோமல்லவா? அந்த ஏழில் குளத்தூர்ப் பிரிவைச் சேர்ந்தவரே நமது சண்முகனுர்.

## நாட்டுக்கோட்டையாரில் மற்றும் மூவகை :

ஒரு காலத்தில் நாட்டுக்கோட்டையாரிலிருந்து பிரிந்த அரிவியூரார், சுந்தரத்தார் என்ற இரு பிரிவினர் செட்டிநாட்டிலும், செந்தமிழ் நாட்டிலும், குமரக் கோட்டத்தில் கோட்டாறுப் பகுதியிலும் வாழ்கின்றனர். இவர்கள் தங்களை நாட்டுக் கோட்டையார் என்று சொல்லிக் கொள்வதில்லை. அரிவியூரார், சுந்தரத்தார் என்றே தங்களை அழைத்துக் கொள்கின்றனர். அரிவியூரார் காலக் கிரமத்தில் இருகூருகப் பிரிந்து வடக்கு வளைவார், தெற்கு வளைவார் என சொல்லிக் கொண்டு கோத்திரங்களை குடிப் பட்டமென அமைத்துக் கொண்டு ஒருவர்க்கொருவர் கொள்வினை கொடுப்பினையற்று வாழ்ந்து வருகின்றனர்.

2563

ஒற்றைவடத்தார்

பெரும்பிரிவினரான நாட்டுக்கோட்டை நகரத்தாருடன் எல்லாவகையிலும் ஒன்றுபட்டு, "ஒற்றைவடத்தார்" என்ற சிறப்புப் பெயருடன் ஒரு சிறு பிரிவினர் உள்ளனர். இவர்கள் சுமார் நானூறு புள்ளிகளாக, திருப்பத்தூர் வட்டத்தில் முறையூர், புதுவயல், வேங்கைவயல், வீரசேகரபுரம் ஆகிய நான்கு ஊர்களில் மட்டுமே வாழ்கின்றனர். இவர்கள் முறையூர் செட்டியார்கள் என்றும் அழைக்கப்படுகின்றனர். இவர்களும் நாட்டுக்கோட்டை நகரத்தார் என்ற பெயரையே தாங்கி நிற்கின்றனர். ஒற்றை வடக்காரர் என்ற சிறு பிரிவினருக்கும் இரட்டை வடக்காரரென்ற பெரும் பிரிவினருக்கும் கோவில்களும் கோத்திரங்களும் ஒரே மாதிரி உள்ளன. ஒன்பது நகரக் கோயில்களிலும் ஒற்றை வடக்காரர்களுக்கும் பாத்தியம் உண்டு. கோயிலுக்கு செலுத்தவேண்டிய திருவிளக்குக் காணிக்கை, விசேஷ வரி முதலியன எல்லாமுமே ஒற்றை வடக்காரரும் செலுத்தி வருகின்றனர். ஒற்றை வடக்காரருக்கும் இரட்டை வடக்காரருக்கும் கொள்வினை கொடுப்பினை இல்லை. ஆனால் இப்பொழுது இருவருக்குள்ளும் சீர்திருத்த திருமணங்கள் சில நடந்தேறி இருக்கின்றன. திருமணவைபவத்தில் ஒற்றை வடக்காரர் ஒருபிரி கொண்ட மங்கலசூத்திர நாணை அணிகிறார்கள். இரட்டை வடக்காரர் இரட்டைப்பிரி கொண்ட மங்கலசூத்திர நாணை அணிகின்றனர். இருவருக்குள்ளும் இதைவிடவேறு வித்தியாசங்கள் எதுவும் இல்லை.

இந்த ஒற்றை வடத்தார் வாழும் நான்கு ஊர்களிலும் புகழாலும், புள்ளிகள் தொகையாலும் சிறந்து விளங்குவது முறையூர் ஆகும். முறையூர்

என்றால் நெறிதிறம்பாத ஊர் என்று பொருள்படும் முறையூரின் சிறப்புக்கருதியே இவர்களை முறையூர்ச் செட்டியார்கள் என்று அழைக்கின்றனர்.

## பறம்பு மலை

"கொடுக்கிலாதானைப் பாரியே என்று
கூறினும் கொடுப்பார் இல்லை"

என்று எம்பிரான் தோழர் சுந்தரரால் பாடப் பெற்றவன் பாரி. ஒப்பாரும், மிக்காரும் இல்லாத கொடைவள்ளல் பாரி. "பாரி வாழ்ந்திருந்த நாடு" என்று தமிழ் நாட்டைப் பாரதியார் பாராட்டுகிறார்.

"பாரி பாரி என்று பல ஏத்தி
ஒருவன் புகழ்வர் செந்நாப்புலவர்;
பாரி ஒருவனும் அல்லன்;
மாரியும் உண்டு ஈண்டு உலகுபுரப்பதுவே!"

என்று கபிலரால் பாராட்டப் பட்டவன் பாரி. பறம்புமலை என்றாலே பாரியின் கொடைவளந்தான் நம் நினைவுக்கு வருகிறது. தனக்குச் சொந்தமான முந்நூறு ஊர்களையும் பரிசிலர்க்குக் கொடுத்து விட்டவன் அவன். கொள்கொம்பு இன்றித் துவண்டு நின்ற முல்லைக் கொடிக்குத், தான் ஏறி வந்த தங்கத் தேரைத் தந்து விட்டு, காலால் நடந்து அரண்மனை சென்றவன் அவன். அவன் வாழ்ந்த பறம்புமலை காலத்தால் மருவி இப்போது பிரான்மலை என்று அழைக்கப்படுகிறது.

## முறையூர்

இந்தப் பறம்பு மலைக்கு ஆறுகல் அண்மையிலும் காரைக்குடியிலிருந்து 22 கல் தொலைவிலும், திருப்பத்தூரிலிருந்து எட்டு கல் தொலைவிலும்,

திண்டுக்கல் சாலை விலக்கு வழியிலிருந்து ஒரு கல் தொலைவிலும், மதுரைச்சாலை, கிருஷ்ணாபுரம் என்ற ஊரிலிருந்து விலக்கு வழியில் மூன்று கல் தொலை விலும் முறையூர் இருக்கிறது. பறம்புமலைச்சாரலை அடுத்துள்ள முறையூர், பாரியைப்போல வள்ளன்மை படைத்த சண்முகனாரை ஈன்றது பொருத்தந்தானே!

வழக்குரைத்து, ஞாயம் கேட்டு வந்தவர்க்கு, சற்றும் தாமதம் செய்யாமல் அக்கணமே அவர் களுக்கு நீதி வழங்குவதனால் இதற்கு முறையூர் என்று பெயர் வந்ததாக ஒரு புலவர் கூறுகின்றார்.

"அவனியில் எவரும் அறைந்திடும் முறைகேட்டு
அக்கணம் அவரவர் மனத்துள்
உவகைமிக் கொளச் செய்து உதவலால் இதுவே
உயர் முறையூர் என உரைக்கும் நவமலி நகர்"

என்பது புலவர் வாக்கு.

தற்போது சுமார் மூவாயிரம் மக்கள் உழவையே தொழிலாகக் கொண்டு இவ்வூரில் வாழ்கின்றனர். நீர்வளமும், நிலவளமும் ஒருங்கே அமையப் பெற்ற அமைதியான இடம் இது. ஊருக்கு வடபுறத்தில் பாலாறு என்ற காட்டாறு ஓடுகிறது. மழைகாலத்தில் மட்டுமே இவ் ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடும். அவ் ஆற்றின் தென் கரையில் மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயம் உள்ளது. இது சிவகெங்கை சமஸ்தான நிர்வாகத்திற்குட்பட்டது. இது முதலில் சிறிய ஆலயமாகவே இருந்தது. வள்ளல் சண்முகனாரின் தந்தையார் இராமன் செட்டியார் இதை விரிவு படுத்துவதற்காக சமஸ்தான அனுமதி பெற்று திருப்பணி தொடங்கினார். ஆனால் அப்பணி நம் வள்ளல் சண்முகனார் காலத்தில் தான் முடிவு பெற்றது. பல லட்சம் ரூபாய் செலவில் ஊருக்கு அணி செய்யும் வண்ணம் வானுற ஓங்கி

இருக்கிறது இவ் ஆலயம். சுற்றிலும் கல்கட்டு அமைந்த தெப்பக்குளம் ஒன்றும் கோவிலுக்கு அணி செய்கிறது.

### தந்தையார்

''பூமலிந்து ஓங்கும் பொழில்களும், தடங்களும்
நந்தன வனங்களும், நந்தா வளத்தொடு
சிர்சார்ந்து இலங்கும் செல்வமாநகரம்''

என்று வீம கவி பாராட்டிய இந்த முறையூர் என்னும் முறைசைப் பதியிலே பழனியப்ப செட்டியார், என்பவர் சிறப்புடன் வாழ்ந்து வந்தனர். அவருக்கு, சுப்பிரமணியன் செட்டியார், சின்னையா செட்டியார், பழனியப்ப செட்டியார், இராமன் செட்டியார் என்னும் நான்கு புதல்வர்களும் இருபுதல்விகளும் இருந்தனர். நான்காமவராகிய இராமன் செட்டியாரே நமது சண்முகனாரை மகனாகப் பெற்றெடுத்த பாக்கியசாலி.

இந்த இராமன் செட்டியாரைப் பற்றி ஒரு புலவர் பின்வருமாறு பாடியுள்ளார்.

"திருமருவும் முறைசை வளர் மீனலோசன வல்லி
சேவடி வணங்கி ஏத்தித்
திகழ் பழனி யப்பவணி கேந்திர சுதாகரன்
செய் தவத்தால் உதித்த
செல்வனும் சுப்ரமண்யக்குரிசில், சின்னையா,
சிலமுறு பழனியப்பன்,
சிரான மூவர்க்கும் அனுசன் என ஓங்கி, ஆண்
சிங்கடா கைகள் செலுத்திய
................................ராமநாதப் பிரபு"

இராமன் செட்டியார் மிகவும் அதிர்ஷ்டக்காரர். இவர் பிறந்தபின்னரே பழனியப்ப செட்டியாருக்கு

சிவகெங்கை சமஸ்தானத்துக் கிராமங்கள் குத்தகைக்கு கிடைத்தன. தமது முன்னேர்களைப் போல செல்வத்தை ஈட்டுவதில்மட்டு மல்லாது, பாடல் பெறுவதிலும், பலர் மெச்ச வாழ்வதிலும் பெரு விருப்பம் கொண்டவர் இவர். பயன் மரம் உள்ளூரில் பழுத்ததைப் போல, பலருக்கும் பயன் பட்டு வாழ்ந்தார். வணிகத் துறையிலும் மேம்பட்டு, அக்காலத்திலேயே பத்து லட்சங்களுக்கு அதிபதி யாக விளங்கினர்.

## அரசர் தொடர்பு

இராமனுதபுரம், மருங்காபுரி, சிவகெங்கை, மன்னர்களும், குறிப்பாக பாஸ்கர சேதுபதி, கவுரி வல்லபதேவர் முதலியவர்களும் இவருக்கு நெருங்கிய நண்பர்கள்.

கிராமக் குத்தகைகள் சின்னையா செட்டியார் பெயரிலேயே இருந்தன. இருந்தாலும் இவர் களுடைய வியாபார விலாசம் "பழ. ராம." என்ற ராமன் செட்டியார் பெயரிலேயே இருந்தது. "பழ. ராம." என்ற பெயரில் கொழும்பிலும் சென்னையிலும் கடைகள் இருந்தன.

## ஹக்தார்

சிவகெங்கை மன்னர், அரசினர்க்கு மொத்த மாகத் தீர்வை செலுத்தி விட்டு, நேரிடையாக வரி வசூலிக்கும் மேல்வார உரிமை பெற்றிருந்தார். அவ் அரசரிடமிருந்து முறையூர், சூரக்குடி ஆகிய இரு கிராமங்களிலும் மொத்தக் குத்தகையாக மூன்று ஆண்டுகளுக்கு அந்த மேல்வாரம் வசூலிக்கும் உரிமையை தமையன் சின்னையா செட்டியார் பெயரால் இராமன் செட்டியார் பெற்று அனுபவித்து வந்தார்.

ஒருமுறை காளுடுகாத்தான் சாத்தப்ப செட்டியார் வகையினர் (ராஜா சர் அண்ணுமலை செட்டியாரின் முன்னேர்) வந்து மேற்படி இரு கிராமங்களையும் குத்தகைக்கு எடுத்துவிட்டனர். இராமன் செட்டியார் தமக்கிருந்த செல்வாக்கினுல் மக்களைத் திரட்டி, சாத்தப்ப செட்டியார் வகையினர் குத்தகை வசூலிக்க முடியாமல் செய்துவிட்டனர்.

அதன் பிறகு போட்டியின்றி இராமன் செட்டியாரே மூன்ருண்டுக்கு ஒருமுறை மேற்படி கிராமங்களைக் குத்தகைக்கு எடுத்து, ஹக்தாராக (வசூல் உரிமையாளராக) இருந்து மேல் வாரம் வசூலித்து வந்தார்.

## அரசருக்கு உதவி

அன்றிருந்த சிவகெங்கை அரசர் கவுரிவல்லப தேவர், துரைசிங்கத்தேவர் காலத்தில் சிவகெங்கை அரசு பொருளாதாரத்துறையில் மிகவும் சீர்குலைந்து இருந்தபடியால், அரசு உரிமை சம்மந்தமாக வழக்குகள் பல நீதிமன்றம் ஏறின.

அரசருக்கு வேண்டிய பொருளை அள்ளிக் கொடுத்து பிரிவுகவுன்சில்வரை செல்வதற்கு உதவி செய்து வழக்கில் வெற்றிபெறச் செய்தார் இராமன் செட்டியார்.

பிற்காலத்தில் சிவகெங்கை அரசருக்கும் ராமன் செட்டியாருக்கும் சில சில்லரை வழக்குகள் ஏற்பட்ட துண்டு. அவற்றிலெல்லாம் ராமன் செட்டியாருக்கே வெற்றி கிட்டியது. ஆயினும் அரசர்பேரில் தீர்ப்பு செய்யப்பட்ட டிக்கிரிகளை செட்டியார் நிறை வேற்றவில்லை.

பல காலமாக பலவித வழக்குகள் நீடித்த காரணத்தால், அரசாங்கத் தீர்வை செலுத்த முடியாத நிலைமை சிவகெங்கை அரசருக்கு

ஏற்பட்டது. அரசுரிமையே பறிபோய்விடும் என்ற நிலைமை ஏற்பட்ட சமயம் அரசர் கட்டவேண்டிய பாக்கிகளைத் தாமே கட்டுவதாக ஒப்புக்கொண்டு, அந்தப் பெருந்தொகைகளை மதுரைக்கசானாவில் வெள்ளி ரூபாய்களாகச் செலுத்தினார் இராமன் செட்டியார். அக்காலத்தில் ஐந்து, பத்து ரூபாய் நோட்டுக்கள் பழக்கத்தில் இல்லை. பைகளில் வெள்ளி ரூபாய்களை கட்டி மாட்டு வண்டியில் ஏற்றி முறையூரிலிருந்து மதுரை செல்ல அப்பொழுது இரவுபகல் இரண்டு நாட்கள் செல்லுமென்பதும் திருடர் பயம் உண்டு என்பதும் குறிப்பிடத்தக்கது.

## அரசர் நன்றி

இந்தப் பேருதவியை சிவகெங்கை அரசர் மறக்கவில்லை. ஆண்டுக்கு ஐயாயிரமாக இருந்த குத்தகையை மூவாயிரமாகக் குறைத்து, நிரந்தரக் குத்தகையாக இராமன் செட்டியாருக்கு வழங்கினார். அப்போது எழுதிய குத்தகைப் பத்திரத்திலே, இவர் செய்த உபகாரம் முழுவதும் வரிசைப்படுத்தி எழுதப் பட்டுள்ளது. இப்படி எழுதுவது அரசரைத் தாழ்த்திக் காட்டியபோதிலும், தமக்கு இராமன் செட்டியார் பாலுள்ள பெருமதிப்பு காரணமாக அரசர் இவ்வாறு மனமுவந்து எழுதிக்காட்டி யுள்ளார்.

## ஜமீன்தார்

கிராமங்களைக் குத்தகைக்கு எடுத்தவர்களை ஹக்தார் (வசூல் உரிமையாளர்) என்றே அழைப்பது வழக்கமாயினும், அரசருக்கு உற்றுழி உதவிக் காத்தமையால் மக்கள் இவரை சிவகெங்கை ஜமீன்தாரைப் போலவே நினைத்து முறையூர் ஜமீன்தார் என்றே அழைக்கலாயினர்.

ஒருவர் சொத்தை ஒருவர் வாங்கிய பிறகு வாங்கியவரும், விற்றவரும் நெருங்கிய நட்புக் கொள்வது அரிது. ஆனுல் இராமன் செட்டியார் குடும்பமும், சிவகெங்கை அரசர் குடும்பமும் நெருங்கிய நட்பினுல் வெகுகாலம் பிணைப்புண்டு வாழ்ந்தனர். அக்காலம் சிவகெங்கை அரசியாக விளங்கிய உடையம்மை நாச்சியார் முறையூருக்கு அடிக்கடி வந்து இவர் குடும்பத்தினருடன் அளவளாவி விருந்துண்டு செல்வதும் ஒருவர்க் கொருவர் முறை செப்பி அழைத்துக் கொள்வதும் உண்டு.

## திருப்பணிகள்

இரு கிராமங்கள் குத்தகைக்குக் கிடைத்த உடனே ஏதாவதொரு திருப்பணி செய்யவேண்டும் எனக் கருதினுர் இராமன் செட்டியார். சிவகெங்கை அரசைச் சேர்ந்த முறையூர் கோவில் திருப்பணியை மேற்கொண்டார். மிகச் சிறியதாக இருந்த கோவிலைப்பெரிதாக விரிவுபடுத்தினுர். சிவகெங்கை அரசருக்கும், இவருக்கும் அருகருகே சிலைகள் எழுப்பினுர். இக்கோவிலிலுள்ள இறைவன் பெயர் சொக்கலிங்கம்; இறைவி பெயர் மீனுட்சி. மீனுட்சி சுந்தரேஸ்வரர் தேவஸ்தானம் என இது அழைக்கப் பெறுகிறது. இக்கோவில் திருப்பணிக்குப் பல இலட்சங்கள் செலவாயின.

முறையூருக்கு அருகிலுள்ள சூரக்குடி கிராம தேவதையாகிய முத்தையனுருக்குப் பல்லாயிர ரூபாய் பெறுமான தங்க நகைகள் செய்து சாத்தினுர். இந்த நகைகளே அக்காலத்துப் பிரபல திருடர்களான திருமலை நாட்டார்கள் வந்து திருடிச் சென்று விட்டனர். போலீஸ் உதவியின்றி, மாறு வேடத்துடன் ஆட்களை அனுப்பி மேற்படி நகைகளை மீட்டுக் கொண்டு வந்த திறமையை இவ்வட்டார மக்கள் கதை கதையாகக் கூறுகின்றனர்.

## சத்திரப்பணி

மேலூர் — மதுரைசாலையில் மேலூருக்கு பதினுன்கு கல் கிழக்கே முறையூருக்கருகில் சத்துரு சங்காரக்கோட்டை என்னும் ஊர் உள்ளது. அவ்வூரில் ஒரு சத்திரம் (தருமசாலை) கட்டினுர் இராமன் செட்டியார். அன்று இந்தச் சாலை இராஜபாட்டையாக விளங்கியது. அந்தச் சத்திரத்தில் போக்கு வண்டிக்காரர்களுக்கும், கால்நடையாக வரும் வழிப்போக்கர்களுக்கும், துறவிகளுக்கும் அன்ருடம் இருவேளை அன்னம் வழங்கவும், கட்டமுது கட்டித்தந்து உபசரிக்கவும் ஏற்பாடுகள் செய்திருந்தார். இந்த சத்திரப்பணி குறைவற நடந்து வருவதற்காக பல சொத்துக்களை எழுதி வைத்ததோடு சிவகெங்கை சமஸ்தானத்திலிருந்து சாசுவத குத்தகையாகப் பெற்ற சீர்சேர்ந்தமங்கலம் கிராமத்தின் மேல்வார பாத்தியதையையும் திரணி வயல் இருவாரப் பாத்தியதையையும் மூக்கன்பட்டி என்ற ஒரு கிராமப் பாத்தியதையையும் தானமாக வள்ளல் சண்முகனுர் தந்தையார்கள் எழுதி வைத்திருந்தார்கள். நமது தேசீயசர்க்கார் கொண்டு வந்த ஜமீன் ஒழிப்புச் சட்டம் மூலம் இக்கிராமங்களிலிருந்த பாத்தியதை இப்பொழுது விலகிப் போய்விட்டது. இந்தச் சத்திரம் தொடங்கிய காலத்தில் பாலகிருஷ்ண பாரதியார் என்ற புலவர்,

“பாருலகு ளோர்துதித்து அகமகிழ நல்கீர்த்தி
பாலனம் செய்து எந்நாளும்
பணிலங்கள் அடர்சத்ரு சங்கார நகர்மீது
பரிதிமதி உள வரையிலும்
பண்புமிகும் அன்னசத்திர தர்மப் பிரதிஷ்டையும்
பண்ணி மனுவில் சிறந்து
தருஐந்தும் நாணமுற எக்கால வேளையும்
சந்தோஷ கர மாகவே
‘தா,தா’ எனப்பகரும் ஆதுலர்க்கு உதவுரவி
தனயனும் கர்ண சமூகம்...........................”

என்று பாடிப் பாராட்டியுள்ளார்.

## பாடல் பெற்ற உணவு

பிற்காலத்தில், இச் சத்திரத்து நிர்வாகம் வள்ளல் சண்முகனுர் வசம் இருந்த போது ஒரு முறை வேம்பத்தூர்ப் பிச்சு பாரதிகள் என்ற புலவரும் வீம கவி என்ற புலவரும் இச்சத்திரத்தில் அன்னமுண்டு மகிழ்ந்தனர். அப்போது பிச்சு பாரதிகள் வீமகவியை நோக்கி, "நீர் உண்ட வகையும், இடமும் ஒரு வெண்பாவால் சொல்லுக" என்ற போது வீமகவி கீழ்க்கண்ட வெண்பாவைப் பாடியுள்ளார் :—

"கதலிக்கா யின்கறியும், கத்தரிக்காய்க் கூட்டும்,
பதமான மாவடுவும், பாங்காய்—இதமாகும்
நுண்மையொடும் உண்டோம்—பொன் நூல்உணர்வார் வாழ்முறையைச்
சண்முகனுர் சத்திரத்தில் தான்"

தமிழ்த்தாத்தா உ.வே. சாமிநாதையர் அவர்கள் ஏடு தேடி வந்தபோது இச்சத்திரத்தில் தங்கி உணவுண்டு சென்றுள்ளார்கள்.

இந்தச் சத்திரம் இன்னும் அழியாமல் இருக்கிறது. ஆனுல் தனுஷ்கோடி இருப்புப்பாதையும், லாரி, பஸ் போக்குவரத்தும் ஏற்பட்ட பிறகு சத்திரத்தின் தேவை குறைந்து விட்டது.

## இலக்கிய ஆர்வம்

இராமன் செட்டியார் இலக்கியத்தில் மிகவும் ஆர்வம் காட்டினுர். புலவர்களுக்கு வாரி வாரி வழங்கினுர் ; வரையாப் புகழ் பெற்ருர்.

இவர் மீது பாலகிருஷ்ண பாரதியார் என்னும் புலவர் "காதற் பிரபந்தம்" என்னும் நூல் ஒன்று பாடியுள்ளார். அது சொற்சுவை, பொருட்சுவை மிகுந்து விளங்குகின்றது.

இராமன் செட்டியார் அமரரான போது, கொட்டாம்பட்டி கருப்பையாப் பாவலர் பாடிய பாடல்கள் "சரமகவிதா மஞ்சரி" என்னும் பெயரில் அச்சாகியுள்ளது. அக்காலப் புலவர்கள் இவர் பால் எத்தகைய அன்பு காட்டினர் என்பதற்கு அப்பாடல்கள் எடுத்துக் காட்டாக உள்ளன.

முறையூர் மீனுட்சிசுந்தரேஸ்வரர் மீது பிள்ளைத் தமிழ் இயற்றும்படி கருப்பையாப் பாவலரை இவர் கேட்டுக் கொண்டார். முறையூர் தலபுராணம் பாடும்படி பாலகிருஷ்ண பாரதியாரை வற்புறுத்தி வந்தார். ஆனுல் அந்த ஆசைகள் நிறைவேற வில்லைபோலும்!

# 3. வள்ளலின் தோற்றம்

இத்தகைய வள்ளன்மை பூண்டு வாழ்ந்திருந்த இராமன் செட்டியாருக்கும், நாச்சம்மை ஆச்சிக்கும் 1875 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் இருபத்தாரும் நாள் இரண்டாவது குமாரராகத் தோன்றினர் சண்முகனர். மூத்தவர் சுப்பிரமணியம். சண்முகனருக்கு இரு தம்பிகள் உண்டு. கருப்பன் செட்டி, ராமசாமி என்பன அவர்கள் பெயர்கள். சீதை ஆச்சி, சிவகாமி ஆச்சி என இரு சகோதரிகளும் இருந்தனர்.

மூத்தவராகிய சுப்பிரமணியம் இளமையிலேயே காலஞ் சென்றமையால், குடும்பப் பொறுப்பு சிறு வயதிலேயே சண்முகனரை வந்தடைந்தது. படிப்பிலும், நுண்ணறிவிலும் சிறந்து விளங்கினர் சண்முகனர். உலக விவகாரங்களிலும் சிறுவயதிலேயே மேதையாகத் திகழ்ந்தார்.

## சுவீகாரம்

சண்முகனரின் பெரிய தந்தையார் சின்னையா செட்டியாருக்கு குழந்தைகள் இல்லை. ஆகையால் அவர் சண்முகனரிடம் மிகவும் அன்பு காட்டினர். பின்னர், மஞ்சள் நீர் புத்திரனுக-சுவீகார புத்திரனுக சண்முகனரை சின்னையா செட்டியார் வரித்துக் கொண்டார். ஆகையால் புலவர்கள் சண்முகனரைப் பற்றிப் பாடிய பாடல்கள் பலவற்றில் "சின்னையன் சேய்" என்றே பாராட்டிப் பாடியுள்ளனர்.

## செல்வாக்கு

சண்முகனர் பிறந்த காலத்தில் குடும்பம் மிகவும் செல்வாக்காக இருந்தது. அக்காலத்தில் நாட்டுக்கோட்டையாரில் செல்வத்தாலும்,

செல்வாக்காலும் சிறந்து விளங்கியது இவர்கள் குடும்பம். சண்முகனார் குடும்பப் பொறுப்பை ஏற்கும் காலத்தில் பத்து லட்சங்களுக்கு அதிபதியாக விளங்கினார். அக்காலம் பத்து லட்சம் என்பது இன்றைய ஒரு கோடி ரூபாய்க்குச் சமம் என்று கொள்ளலாம். அக்காலத்தில் செட்டி நாட்டில் பத்து லட்சம் பணம் படைத்தவர் வெகு சிலரே இருந்தனர். செல்வத்தோடு செல்வாக்கும் சண்முகனாரைத் தேடி வந்தடைந்தது.

இளமை முதல் சண்முகனாரும், தம்பி கருப்பன் செட்டியும் இராமலட்சுமணர் போல இணைபிரியாமல் இருந்தனர். இறுதிவரை இந்தப் பிணைப்பு நீடித்திருந்தது.

# 4. பள்ளிப் படிப்பு

குல முறைப்படி ஐந்து வயதில் சண்முகனார் பள்ளிக்கு அனுப்பப்பட்டார். அக்காலத்தில் திண்ணைப் பள்ளிதான் உண்டு. மகர் நோன்பு விசயதசமி யன்று முதன் முதலாகப் பள்ளிக்குச் சென்ற சண்முகம் ஐந்தே ஆண்டுகளில் பள்ளிப் படிப்பு முற்றிலும் கற்றுத் தேர்ந்தார்.

## அக்காலக் கல்விமுறை

அக்கால கல்வி முறையைப் பற்றி நாம் ஓரளவு தெரிந்து கொள்வோம். இக்காலம்போல் ஏழு பீரியட், ஐந்து மணி நேரப் படிப்பில்லை. வாரத்துக்கு இரண்டு நாள் விடுமுறையும் இல்லை. காலாண்டு, அரையாண்டு ஆண்டுத் தேர்வுகளும் இல்லை; அதையொட்டிய விடுமுறைகளும் கிடையாது. அமாவாசை, பாட்டியமை (பிரதமை), வாவு (உவா = பௌர்ணமி) என்று விடுமுறை நாட்கள் ஆண்டுக்கு முப்பதுக்கு மேல் போவதில்லை.

அதிகாலையில் எழுந்தவுடனே குழந்தைகள் பள்ளிக்கு வந்து விடுவார்கள். காலைப்பாடங்கள் படித்து முடித்த பிறகே காலை உணவுக்காக வீடு செல்வர். அப்போது,

''காலமே எழுந்திருந்து
கால்கைகள் சுத்தி செய்து
கோலமாம் நீறு பூசிக்
குழந்தைகள் பசிகள் தீர
பாடமும் படித்தோமையா
படியடி பட்டுக் கொண்டோம்
சிடரை அனுப்பும் ! ஐயா !
திருவடி சரணம் தானே''

என்று பாடி, ஆசிரியர் அனுமதி பெற்றுச்

செல்வர். வீட்டுக்குச் சென்று பழையது குடித்து, உடனே திரும்பிவந்து படிப்பார்கள். பகலில் உச்சி வேளை ஆனவுடனே,

"சட்டம், சரவை தான் எழுதி,
சரியாய் இலக்கம் தொகை ஏற்றி,
இட்டகணக்கும் வாசகமும்,
எல்லாக் கணக்கும் தீர்ந்து கொண்டோம்.
பட்டப் பகலோ அடித் திரும்பி
பசியோ பொறுக்க மாட்டோம் நாம்.
திட்டமாக அனுப்பிடுவீர் !
செம்பொன் அடிகள் சரணம் ஐயா !"

என்று கூறி விடை பெற்றுச் சென்று, உணவு உண்டு வீடு திரும்புவர். சட்டம், சரவை என்ருல் ஓலையில் எழுதுவதைக் குறிக்கும்.

பின்னர் மாலையில் வீட்டுக்குச் செல்லுகையிலும் ஒரு பாட்டு:-

,அந்திக்குப் போகின் ரும்யாம்.
அகந்தனில் விளையாடாமல்,
சுந்தர விளக்கின் முன்னே
சுவடிகள் அவிழ்த்துப் பார்த்து,
வந்தது வராத தெல்லாம்
வகையுடன் படித்துக் காட்டி
கந்தனர் சேவல் கூவ
காலையில் எழுந்து வாரோம் ஐயா !
என்பது அப்பாட்டாகும்.

முறைவைத்து சட்டம், சரவை எழுதுவது, பழம் பாடங்களை நெட்டுருச் செய்வது போன்ற சிறந்த முறைகள் நடைமுறையிலிருந்தன. சூட்டிகையான பையன்கள் மூன்று ஆண்டுகளில் கூட பள்ளிப் படிப்பை முடித்து விடலாம். அசமந்தமானுலும் ஆறேழு ஆண்டுகளுக்கு மேல் போகாது. பள்ளிக் கட்டணம் மிகவும் குறைவு. "தொலை" க்குச் சென்று —கடல் கடந்து சென்று — திரும்பும் போது தம்

ஆசிரியருக்கு பழைய மாணவர்கள் "தட்சிணை" கொடுப்பதுண்டு. குரு பக்திக்கு மதிப்பிருந்த காலம். மாணவரை மட்டும் நம்பி ஆசிரியர் வாழ்ந்த காலமும் ஆகும்.

அன்றுடம் ஆசிரியருக்கு வேண்டிய விறகு முதலிய பொருள்களை மாணவர் கொண்டு தருவர். அக்காலத்தில் மாணவிகள் மிக அரிது! சனிக்கிழமை தோறும் மாணவர் ஆசிரியருக்கு எண்ணெய் கொண்டு வருவர். சம்பளத்திற்குப் பதிலாக மாணவர் ஆசிரியரின் பல தேவைகளையும் பூர்த்தி செய்யவேண்டுமென்பது கடமை.

மாணவர்கள் தரையில் மணல் விரித்து அதன் மேல் அமர்ந்து, கல்வி பயிலுவர். வாரம் ஒருமுறை பழைய மணலை அள்ளி அப்புறப் படுத்தி விட்டு, புதிய ஆற்று மணலைக் கொண்டு வந்து பரப்புவர். தாங்கள் உடுத்துள்ள துண்டுகளிலேயே மணலை மூட்டையாகக் கட்டி மாணவர் சுமந்து வருவது வழக்கம்.

திண்ணைப்பள்ளியிலே அரிச்சுவடி, பிரபவச்சுவடி, (வானநூல்,) ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி, நன்னெறி, நிகண்டு, நன்னூல் முதலிய இலக்கிய இலக்கண நூல்களையும், நெல்லிலக்கம், முந்திரி இலக்கம், சீரானிலக்கம் வரைக்காப் பாடம், கீழ்வாயிலக்கம், கணக்கதிகாரம் குழிமாற்று (சேத்திர கணிதம்) முதலிய கணிதச் சுவடிகளையும் குமரேச வெண்பா, அறப்பளீ சுர சதகம், போன்ற பக்தி நூல்களையும் போதிப்பது வழக்கம். அவைகளைக் கற்றுத் தேறினர் சண் முகனர். செட்டிமார் தொழிலுக்குத் தேவையான வட்டிக் கணக்கு முறைகளிலும் தேர்ச்சி பெற்ருர்.

### பலதுறைப் பயிற்சி

கொட்டாம் பட்டி கருப்பையாப் பாவலர் தொடர்பால், தமிழ் இலக்கியங்களில் அதிசயிக்கத்

தக்க புலமை பெற்றார். பாலகிருஷ்ண பாரதியார் தொடர்பால் வடமொழியிலும் தக்க புலமை பெற்றார். பீதாம்பர ஐயர் என்னும் பிரபல சால வித்தைக்காரரைக் கொண்டு வந்து அவரிடம் பல வித அதிசயமான சால வித்தைகளைக் கற்றுத் தேர்ந்தார். மற்றும் தகுந்த திறமையுடையவர் களிடம், மெஸ்மெரிஸம், ஹிப்னாடிஸம், மோடி எடுத்தல் முதலிய பல வித்தைகளையும் திறமையுறப் பயின்றார்.

## சாலவித்தை

யாராவது சாலவித்தைக்காரர் முறையூர் வட்டாரத்துக்கு வந்தால், முதலில் சண்முகனாரிடம் வந்து வணங்கி ஆசிபெற்றே தமது வித்தைகளைத் தொடங்குவது வழக்கம். யாராவது இவரிடம் அணுகாமல், கருவங் கொண்டு, தமது வித்தைகளைச் செய்யத் தொடங்கினால், அந்த வித்தைகளைப் பலிக்காமல் செய்து விடுவார் சண்முகனார். பிறகு, அந்தவித்தைக்காரன் இவரிடம் வந்து வணங்கி, "என் வயிற்றுப் பிழைப்புக்காகச் செய்கிறேன்; என்னை மன்னித்து விடுங்கள், உங்களை குருவாக ஏற்றுக் கொள்கிறேன்; என் வித்தைகளைத் தடைசெய்யாதீர்கள் என்று கர்வ பங்கப்பட்ட வித்தைக்காரன் மன்னிப்புக் கோரினால், பிழைபொறுத்து பிறகு அவன் திறமையை மெச்சி பரிசுகளை வழங்குவது சண்முகனாரின் வழக்கமாகும்.

## மோடி வித்தை

மோடி வித்தை என்பது ஒரு அபூர்வமான வித்தை. ஒருவன் மோடி வைப்பான். மற்றொருவன் அதை எடுக்கவேண்டும். எடுப்பவனுக்குப் பல துன்பங்கள் நேரிடுமாம். உதாரணமாக ஒரு

கத்தியை எடுத்தால் அது எடுப்பவனைக் குத்துமாம் தடியை எடுத்தால் அது தலையில் அடிக்குமாம். உடலை விட்டு துண்டித்த ஆட்டுத் தலையை வைத்து எடுக்கச் சொல்வதும் உண்டு. அது உயிர் பெற்ற தலை மாதிரி எடுப்பவனை முட்டுமாம். எடுப்பவன், வைத்தவனுடைய சக்தியை அறிந்து அப் பொருள்களை செயலற்றதாக்க வேண்டும். இது ஒரு பயங்கர சாதனையாகும்.

சில சமயங்களில் மோடி எடுப்பவனும், வைப்பவனும் கூடிப் பேசிக் கொண்டு வந்து, மக்களை ஏமாற்றிப் பணம் பெற்றுச் செல்வதுண்டு. வள்ளல் இந்த மோடி வித்தையில் கை தேர்ந்தவர். ஆதலால் இவரிடம் மோடி வித்தைக்காரர்கள் வர அஞ்சுவர். ஏமாற்றுதலின்றித் தங்கள் வித்தைகளை காட்டுபவர்களுக்குத் தக்க பரிசுகள் தந்து அனுப்புவார்.

## ஓவியக் கலைஞர்

ஓவியக்கலையின் நுணுக்கங்களைச் சிறப்புறக் கற்றிருந்தார். ஆயிரக்கணக்கான கிடைத்தற்கறிய ஓவியங்களைத் திரட்டி வைத்திருந்தார். இலண்டன் மாநகரிலுள்ள ஓவியர் கழகத்தில் உறுப்பினராகிச் சிறப்புற்றார்.

'' ஒருவனுக்கு அமைத்த உருவம் போல் மற்றொன்று
உளுற்றிட அறிகிலாது உழன்று
மருமாலர்த் தவிசில் வீற்றிருப் பவனும்
மன்னும் நான் முதலையான் என்னத்
திரு வுறும் உருவப் படங்கள் ஒன்றினைப் போல்
திகழ் பல இயற்றிடும் செயலால்
தரு உயர் இலண்டன் சித்திரக் கலைதேர்
சங்கத்தும் ஒரு முத்தாய்த் தழைத்தோன் ''

என்று கொட்டாம்பட்டி கருப்பையாப் பாவலர் சண்முகனுருடைய ஓவியப் புலமையைப் பாராட்டி யுள்ளார்.

## இசைப் பற்று

கர்நாடக சங்கீதத்தில் இவருக்கு அபார ஞானம் உண்டு. ஆத்திக்காடு சுப்பண்ணு முதலியோரிடம் பழகி பல இசை நுணுக்கங்களை அறிந்திருந்தார். சிறந்த வித்துவான்களை அடிக்கடி வரவழைப்பார். பலவகை இசைக் கருவிகளும் இவரிடம் இருந்தன. "டேப் ரிக்கார்ட்டர்" போன்ற அக்காலத்திய "போனகிராம்" என்ற சாதனமும் இவரிடம் இருந்தது. அதில் சிறந்த வித்வான்களுடைய பாடல்களைப் பதிவு செய்து வைத்திருந்தார்.

அக்காலத்தில் பாலாமணி என்னும் ஒரு நாடக நடிகை மிகவும் பிரபலமாக விளங்கினுள். அவள் நடிக்கும் நாடகமென்ருல், மக்கள் பலகல் தொலைவு நடந்து செல்வது வழக்கம். ஜெர்மன் நாட்டு அறிஞர் ஒருவர் அவளைப் பற்றிப் பாராட்டி ஒரு கட்டுரையே எழுதியுள்ளார். அவள் நாடகம் என்ருல் கும்பகோணம் தஞ்சை முதலிய ஊர்களில் தேர் திருவிழாவை காணச்செல்வதுபோல் ஜனங்கள் செல்வார்கள். அந்த நடிகையை மெச்சி பல மெடல்கள் வழங்கியுள்ளார். செட்டிநாட்டுப் பகுதியில் நாட்டியக் கலையை ஆதரித்து அதை வளர்த்த பெருமையில் சண்முகனுருக்கு அதிக பங்குண்டு.

# 5. திருமண நிகழ்ச்சிகள்

## முதல் மணம்

கல்விச் செல்வராய், கட்டிளங் காளையாய் விளங்கிய சண்முகனாருக்கு அக்கால வழக்கப்படி சிறு வயதிலேயே திருமணம் சிறப்பாக நடைபெற்றது. உண்ணாமுலை ஆச்சி என்ற தம் அத்தை மகளையே வரித்துக் கொண்டார்.

அக்கால முறைப்படி ஆறு நாட்கள் திருமணம் வெகு கோலாகலமாக நடைபெற்றது. சங்கீதக் கச்சேரிகள், மேளதாளங்கள், மிகச் சிறப்பாய் இருந்தன.

வாழ்க்கைத் துணைவியாக வந்த உண்ணாமுலை ஆச்சி[1] பத்தாண்டு காலம் வாழ்ந்து இறந்துபோனார். வாழ்ந்தது சிறிது காலமே யாயினும் சண்முகனாரின் உள்ளத்தில் நீங்காத இடம் பெற்று விட்டார்.

## மறுமணம்

முதல் மனைவி உண்ணாமுலை ஆச்சி இறந்து ஓரிரு ஆண்டுகளில் இரண்டாவது திருமணம் நிகழ்ந்தது. 1901-ஆம் ஆண்டு—பிலவ வைகாசி 23ஆம் நாள், தமது அத்தை தமகனும், சங்கீத விற்பன்னருமாகிய அருணாசலம் செட்டியார் மகளை மணம் செய்து கொண்டார் சண்முகனார். இரண்டாவது மணமகள் பெயரும் உண்ணாமுலை ஆச்சிதான்.

இந்த இரண்டாவது திருமணம் மிகமிக ஆடம்பரமாக சண்முகனாரின் செல்வாக்கு மிகுந்த காலத்தில் நடைபெற்றது. தமிழ் நாட்டிலேயே இவ்வளவு விமரிசையாக அதுவரை வேறு திருமணம் நடை

---

1 பெண்களை ஆச்சி என அழைப்பது மரபு.

பெற்றதே இல்லை என்னும்படி பெரும் பணச் செலவில் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. இம்மண நிகழ்ச்சிகளைப் பற்றி கருப்பையாப் பாவலர் கூறுகிறார் கேளுங்கள் :

‘என்ன, கல்யாணத்துக்குப் புறப்பட வேண்டாமா?’ என்றார் என் நண்பர். ‘எங்கே கல்யாணம்’ என்றேன் நான்.

‘முறையூரிலே கல்யாணம்’ என்பது கூட மறந்து விட்டீர்களா?’ என்றார் அவர்.

‘ஓ! ஓ! அப்படியா! இதோ புறப்பட்டு விட்டேன்’ என்று அவருடன் அவசர அவசரமாகப் புறப்பட்டு விட்டேன்.

‘மதுரைக்குத்தான் வந்து விட்டோமா!’ என்று ஐயமுற்றேன். ஏனென்றால், எங்கெங்கும் அலங்காரப் பந்தல்களும், பெருந்திரு மாக்கள் கூட்டமும், பலவித இசைக் கருவிகளின் ஒலியும் ஒருங்கே கண்ணுக்கும், காதுக்கும் விருந்தளித்தன. மிதுலா புரியிலே சனகன் மகள் திருமணத்தின் போது நகரத்தை எவ்வாறு அலங்காரம் செய்திருந்தனர் என்பதைக் கம்பன் சொல்லக் கேட்டுள்ளேன். அவ்வூர்ப் பெண்களின் ஆடை, அணிச் சிறப்பையும், அவர்கள் கொண்ட மகிழ்ச்சியையும் கம்பனிடமே தெரிந்திருந்தேன். ஆனால், இன்று முறையூரின் அலங்காரங்களும் மாதர் அணிகளும் கண்டு மலைப் பெய்தினேன். ஏன், கம்பன்கூட மலைத்துத்தான் போவான். ஓ! ஓ! இதுதான் மணமண்டபமா? இந்திர விமானம் என்றல்லவா எண்ணி விட்டேன். புட்பக விமானமா யிருந்தாலும் இருக்கலாமே! இல்லை இல்லை. இது மண்ணில் மேல் அமைக்கப் பட்டிருப்பதால் இது இந்திர விமானமோ, புட்பக விமானமோ அல்ல. மணவிழாக் காட்சிக்கு இலங்கு மண்டபந்தான்.

அங்கே என்ன ஒரே கூட்டம்! வாத்தியங்கள் ஒரே அமர்க்களப் படுகிறதே! ஆடவரும், பெண்டிரும் முண்டியடித்துச் செல்கிருர்களே! யாரையோ பார்க்க அல்லவா அப்படி முந்துகின்றனர்.

மணமகன் மாப்பிள்ளைக் கோலத்துடன் குதிரையிலே உலா வருகின்ருர். அவரைப் பார்க்கத்தான இவ்வளவு கூட்டமும்? குதிரை மீது இருப்பது யார்? ஆம், ஸ்ரீராமபிரான் அல்லவா? மானிடரில் இவ்வளவு ஏற்றமும் தோற்றமும் உடையவர் வேறு யாராக இருக்க முடியும்? மிதிலை வீதியிலே சானகியை மணக்க ஸ்ரீராமபிரான் வந்தபோது அவ்வூர் மக்கள் அவன் அழகிலே ஈடுபட்டு மெய்ம்மறந்தார்களாம். ‘தோள் கண்டார் தோளே கண்டார்; தாள்கண்டார் தாளே கண்டார்; தடக்கை கண்டார் தடக்கையே கண்டார்’ என்று கம்பன் கூறினனே! அது எவ்வளவு உண்மை. மணமகனைக்கண்ட மக்கள் மெய்ம் மறந்து சிலைபோல நிற்கின்றனரே!

மணமண்டபத்துக்குள் நுழைவோம். அதோ சங்கீத வித்வான்களின் வாய்ப்பாட்டு, வீணை, தம்புரு, பிடில், ஆர்மோனியம், சுரகம் முதலிய பின்னணிக் கருவிகள்.

இதோ ஒரு தெய்வமங்கை! அழகெல்லாம் இவளிடம் அல்லவா அடைக்கலம் புகுந்து விட்டது! இவள் தான அந்தப் பாலசரஸ்வதி? அவள் முகப் பொலிவே காட்டுகிறதே இவள் கலைத்திறமையை! வாய் திறந்து பாடவா செய்கிருள்? செந்தேனைத் தென்றலிலே குழப்பி, அமுதச்சுவை பெற நம் செவிகளிலே வார்க்கவல்லவா செய்கிருள்? தவில், நாதசுரம், மோர்ச்சங்கு முதலிய கருவிகள் அவள் பாடலுடன் சேர்ந்து பெருமை கொள்கின்றன. மக்கள் உள்ளம் மகிழ்ச்சிக் கடலில் மிதந்து கரை காணது தத்தளிக்கின்றனவே!

இந்தப் பக்கம் பாட்டுக் கச்சேரி! அங்கே வருவோரை உபசரிக்கத்தான் எத்தனை பேர்! மங்களம் பாடி நடனம் ஆடும் மாதர்கள் ஒரு புறம். எல்லாக் காட்சிகளையும் ஒன்று விடாமல் பார்த்து விடுவோம் என்று கங்கணம் கட்டிக் கொண்டு, இங்கு மங்கும் சலியாமல் ஓடி, கூட்டம் கூட்டமாகக் கூடுகின்றனர் பலர். ஒருவரை ஒருவர் குசலம் விசாரித்துக் கொள்பவர் ஒரு புறம். தங்களுடைய அழகு பன்மடங்காகத் தோன்றவேண்டுமே என்பதற்காக அடிக்கடி ஒப்பனை செய்து கொள்ளும் மங்கையர் ஒரு புறம்.

"கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புலனும் ஒண்தொடி கண்ணே உள"

என்று வள்ளுவர் கூறினர். ஐம்புலனுக்கும் விருந்து அணங்குகளிடம் மட்டுமே கிட்டும் என்பதல்லவா இதன் பொருள்? அந்த வள்ளுவர் மட்டும் இந்தத் திருமண விழாவுக்கு வந்திருந்தால் இப்படிக் கூறுவரோ?

ஐம்புலன்களென்ன, அதற்கு மேலும் புலன்கள் இருந்தாலும் அனைத்துக்கும் இன்பமல்லவா இங்கு கிடைக்கிறது! கண்ணுக்கினிய காட்சிகள்! காதுக் கினிய மெல்லிசை! நாவுக்கினிய உணவு! நாசிக் கினிய நறுமணம்! அமரவும், சாயவும், படுக்கவும், மெல்லிய வெல்வெட்டுத் தலையணைகளும், காசுமீர விரிப்புக்களும் ஆக "ஐம்புலனும் முறையூர் திருமணத்தின் கண்ணே உள" என்று பாடினுல் என்ன?

அங்கே என்ன கூட்டம்? ஒருவர் மேல் ஒருவர் விழுந்து ஓடுகின்றனரே! மணமகன் கொடைக்கரம் செயல்படுகிறது. வந்தவர்க்கெல்லாம் வாரி வாரி வழங்குகின்றார் மணமகன். ஆடை, அணி, பொன் முதலியவை கைக்கு வந்த மட்டும் அள்ளி அள்ளி

வீசுகின்றார். அவற்றைப் பெறத்தான் இவ்வளவு கூட்டமும்.

சண்முகப் பெருமான் தேவயானையை மணந்தார் அமராவதியிலே. அங்குள்ள தேவர்கள் அக் கல்யாண காட்சி கண்டு மனம் பூரித்தனர். பேரின்ப விருந்துண்டனர். இக்காட்சி காணக் கிடைக்காத மனிதரும் காணட்டுமே என்ற கருணையினால் அச் சண்முகனே மீண்டும் அமராவதிக்கு ஒப்பான முறையூரிலே மணக்கோலம் பூண்டு காட்சி தருகிறான் போலும்! கண் பெற்றோம் என்பார் இக் காட்சி கண்டாரன்றோ? இக்காட்சி காணார் கண் பெற்றும் கண்ட பயன் என்ன?

'தீர்க்காயுள், புகழ், கீர்த்தி, செல்வம், புத்திர பாக்யம் இவைகள் மேன்மேலும் உண்டாகுக' என்று முருகனைப் போற்றி, இத் தம்பதிகளை ஆசீர்வதிப் போமாக!

அது சரி. கல்யாணச் சிறப்பைச் சொல்லியாகி விட்டது. மணமக்கள் யாரென்று தெரிய வேண்டாமா? ஆம் ஆம் மறந்தே போனோமே.

உத்தம குணத்தன்; ஒப்பிலா மனத்தன்; உவமையில் மேனி பொன் வண்ணத்தன்; சின்னையா வணிக சிகாமணி தவத்தில் திகழ் நவமணி; சண்முக மென்னும் வள்ளல் தான் மணமகன்.

மணமகள் யார் தெரிகிறதா? வணிகர் குலத் தலைவர் அருணாசலம் என்னும் அருட் செல்வர் வலம்புரிச்சங்கிலே முத்துப் பிறந்தது போல, அச் செல்வர் தவத்திலே உதித்த உண்ணாமுலை ஆச்சி தான் மணமகள்.

மேலே சொன்ன கருத்து அமையும்படி இனிய, எளிய செய்யுட்களாகப் பாடியுள்ளார் புலவர்.[1]

---

1 இப்பாடல் இந்நூலின் கடைசியில் அனுபந்தமாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

## ८. குபேர வாழ்க்கை

### மிடுக்கான தோற்றம்

வள்ளல் சண்முகனார் வனப்பும், மிடுக்கும் வாய்ந்தவர். இறுதிவரை இவர் உடல் கட்டுவிடாமல் இருந்தது. இவர் முகத்தோற்றத்தைக் கண்டாலும் கலி தீரும். செல்வத்தின் பயன் அதை அனுபவிப்பதே என்பதை உணர்ந்தவர் வள்ளல்.

"மேல்ஆடை இன்றிச் சபை புகுந்தால் இந்த மேதினியோர்
நூல் ஆயிரம் படித்தாலும் என்னார். நுவல் பாற்கடலோ
மால் ஆனவர் அணி பொன் ஆடைகண்டு மகளைத்தந்தே
ஆலாலம் ஈந்தது தோல்ஆடை சுற்றும் அரன்தனக்கே"

எனப் பாடினார் நையாண்டிப் புலவர். திருமால் பொன்னாலாகிய பீதாம்பரம் அணிந்துள்ளார். சிவபெருமான் வெறுக்கத் தக்க புலித்தோலை ஆடையாகக் கொண்டுள்ளார். திருமாலுடைய பொன்னாடையைக் கண்ட திருப்பாற்கடலானது அவருக்கு, தன்மகளாகிய இலக்குமியைக் கொடுத்து மருமகனாக்கியது. ஆனால் சிவபெருமானுடைய தோலாடையைக் கண்டு அவனுக்கு விஷத்தைக் கொடுத்து குடிக்கும்படி செய்தது. ஆதலால் அழகாக ஆடை உடுக்காமல் சபையிலே சென்றால் பல கற்ற பண்டிதராயினும் மதிக்கமாட்டார்கள் என்பது இப்பாடலின் பொருள்.

### உடை

வள்ளல் சண்முகனார் நாளோர் ஆடையும் பொழுதொரு சட்டையும் அணிவார். உடையிலே தனிப்பொலிவு காணலாம். வீட்டினுள் இருக்கையில் சட்டை போட்டுக் கொள்ளமாட்டார். விலையுயர்ந்த மல், அல்லது வெண்பட்டு வேட்டி கட்டி, கெண்டை



பிரமுகர் உடையில்
வள்ளல் சண்முகனர்

லேஞ்சு, துயிலித் துண்டு, அல்லது துப்பட்டாவால் உடம்பைபோர்த்தி இருப்பார். நெற்றியில் திருநீறும் திலகமும் நீங்காமல் விளங்கும். கழுத்தில் வைரக் கெவுடு[1] அணிவார். வலது கையில் வைரமுகப்பு வைத்த சங்கிலி அணிந்திருப்பார். சந்தனம் பூசிக் கொள்வதில் அலாதிப் பிரியம்.

வெளியில் செல்லும்போது முழுக்கைச் சட்டை, தலைப்பாகை, தார்ப்பாய்ச்சிக் கட்டிய வேட்டி, அல்லது முழுக்கால் சட்டை, உத்தரீயம், வெள்ளிப் பூண்பிடித்த கைத்தடி. இவற்றுடன் தோற்றம் அளிப்பார். முக்கியமான சதசுகளில் கொலுவிருக்கும்போது, கழுத்து மூடிய லாங்கோட் என்னும் ஜிகினா வைத்துத் தைத்த வெல்வெட்டுச் சட்டை, கால்சராய், சரிகை வைத்த பட்டுக் குல்லா, உடை-வாள், பிரம்பு, வைரம் பதித்த தங்கப்பொத்தான்கள், தங்கச் சங்கிலியுடன் கூடிய தங்கக் கடிகாரம் முதலியவற்றுடன் அரசமிடுக்குடன் காட்சி தருவார். சில சமயம் மேல்நாட்டு முறையில் உடையணிந்து கம்பீரமாகத் தோன்றுவார்.

## எட்டையபுரம் சலவை

இவரது உடைகளை வெளுப்பதற்காக என்றே மாதம் ஒரு முறை[2] எட்டயபுரத்திலிருந்து சலவைத் தொழிலாளி வருவது வழக்கம். கரைகளில் செஞ் சாயம் ஏற்றி, காக்காய்ப் பொன் பதித்து சலவை செய்வதே அலாதி முறை. உள்ளூர் குடிவண்ணார் இருப்பினும் எட்டையபுரத்து சலவைத் தொழிலாளி

---

1. கெவுடு என்பது நடுவில் உருத்திராக்ஷத்தை வைத்து இருபக்கமும் தங்கம் பிடிக்கப்பட்டு சங்கிலியில் கோர்க்கப் பட்டிருக்கும்.

2. இது திருநெல்வேலி ஜில்லா கோயில்பட்டிக்கு அருகில் உள்ளது. எட்டப்ப மன்னர்கள் ஆண்ட ஊர். சுப்ரமணிய பாரதியார் தோன்றிய ஊர்.

தான் இவருக்குச் சலவை செய்யவேண்டும். அந்தச் சலவைதான் இவருக்குப் பிடிக்கும்.

## பழமைப் பற்று

நவநாகரிகத்தில் திளைத்தாலும் இவர் பழமையிடம் பகைமை பாராட்டவில்லை. இவர் கிராப்பு வைத்துக் கொண்டது கிடையாது. குலமரபுப்படி தலையை மழுங்க மழித்துக் கொள்வார். இவருக்குத் தலை மழித்துவிட இரண்டு அல்லது இரண்டரை மணி நேரமாவது செல்லும். ஆனால் என்ன? நாவிதனுக்கு முழுசாக ஒரு ரூபாய் கிடைக்கிறதே! வருஷக் கூலியே அரை ரூபாயாக இருந்த காலத்தில் ஒரே தடவை வேலை செய்து ஒரு ரூபாய் சம்பாதிப்பதென்றால் சாமானியமா? இதனால் நாவிதர்களுக்குள் போட்டி. தங்களுக்குள் முறை வைத்துக் கொண்டு வேலை செய்ய வருவார்கள்.

குலமுறைப்படி சமய தீட்சைகளை உரிய ஆச்சாரியரிடம் பெற்று நாள்தோறும் சிவபூஜை செய்து வருவார் சண்முகனர். தேவாரம், திருவாசகம், திருப்புகழ்களை மனங்கனிந்து இசையோடு பாராயணம் செய்வது வழக்கம்.

## சீர்திருத்த எண்ணம்

இவர் சிறந்த சீர்திருத்தக் கருத்துக்களை உடையவர். அக்காலத்தில் புகழ் பெற்ற நாளிதழாகிய சுதேசமித்திரனைத் தொடர்ந்து படித்து வந்தார். மற்றும் பலவித மாத, வார இதழ்கள் எல்லாம்படித்து உலக அறிவில் சிறந்து விளங்கினர். பிற்காலத்தில் கண்பார்வை இழந்த போதும் பிறரைப் படிக்கச் செய்து உலகச் செய்திகளை கடைசி வரை அறிந்து வந்தார்.



சிவ பூஜையில்
**வள்ளல் சண்முகனார்**

ஆயிரக் கணக்கில் விலையுள்ள வெளிநாட்டு ஓவியங்களும், கலைப்பொருட்களும் வாங்கி தமது மாளிகையை அலங்கரித்தார்.

## அன்றாட நடைமுறை

சண்முகனார் வைகறையிலேயே துயில் எழுவார். எழுந்ததும் கண்ணாடியையும், கருங்குரங்கையும் பார்ப்பார். இவற்றைப் பார்ப்பது மங்கலம் என்பது நம்பிக்கை. இதற்காக ஒரு கருங்குரங்கை வளர்த்து வந்தார்.

காலையில் எழுந்ததும் பார்க்கத் தக்க பொருள்கள் ஐந்து என்பர் ஆன்றோர்.

> "கண்ணாடி, பித்தன், கருங்குரங்கு, கன்னிகையாள்,
> மண்ணாளும் வேந்தனோடு ஐந்து"

என்பது பாட்டு.

இப்பொருள்களில் மூன்று கைவசமே இருந்தன. பித்தனாகிய சிவபெருமானை வழிபாட்டு முகத்தால் எழுந்ததும் கண்டு வணங்கினார். அரசாங்க அலுவலர் பலர் அதிகாலையிலேயே இவரைக் காண வருவர். ஆதலால் மேலே சொன்ன ஐந்தும் ஒவ்வொரு நாளும் காலையில் காணும் பேறு இவருக்கு உண்டு.

காலைக்கடன் முடித்த பிறகு பாலை கொண்டு பல் விளக்கி, ஓலை கொண்டு நாவழித்து, பன்னீர் கலந்த நன்னீரிலே நீராடுவார். நெற்றியில் நீறு பூசி அனுஷ்டானங்களைச் செய்வார். பூவும், புதுப் பொருளும் படைத்து நிறைமொழியும் மறைமொழியும் ஆன காயத்திரி, பஞ்சாட்சரங்களை உருவேற்றுவார். இவர் பூசை செய்வது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

பூசை முடிந்ததும் சிற்றுண்டி கொள்வார். இவர் சுவையறிந்து சமைக்கத் தகுந்த ஆட்களை

அமர்த்தியிருந்தார். இவரைக் காணவரும் அனைவருக்கும் இவர் மாளிகையில் விருந்து உண்டு. வந்த விருந்தினர்களைச் சரிவர விசாரித்து உபசரிக்க வேண்டும் என்பது வேலையாட்களுக்கு நிரந்தரமான கட்டளை.

## உண்ணும் முறை

வடை, பணியாரங்கள் முதலிய சிற்றுண்டிகள் தனித்த பசு நெய்யில் செய்யப்பட்டிருக்கும். அப் பண்டங்களில் சுற்றியுள்ள விளிம்பை மட்டுமே உண்பார். நடுவிலுள்ளவை யெல்லாம் மலைக் குறவருக்கே. இவ்வாறு இவர் உண்டு மீந்த உண்டிகளைப் பெறுவதில் மலைக் குறவர்களுக்குள் போட்டி. தங்களுக்குள் முறைவைத்து வந்து, அவற்றைக் கொண்டுசென்று உண்பர். ஆனை உண்ணும்போது சிந்தும் உணவை ஆயிரம் ஆயிரம் எறும்புகள் உண்ணுவது இயல்பு தானே!

## அணையாத நெருப்பு

சண்முகனார் வாழ்நாளில் பெரும்பாலும், பட்டினங்களிலே தங்குவார். இவர் முறையூருக்கு எப்போது வருவார் என்று தெரிந்து காணவருவோர் பலர். முறையூரில் இருப்பார் என எண்ணி வருவோர் பலர்.

இவர் உத்திரவுப்படி வந்தவர் யாராயினும், எத்தனை நாளாயினும் சாப்பாடு நடந்துகொண்டே இருக்கும். வந்தவராகப் போனாலொழிய யாரும் போகச் சொல்லுவதில்லை. வள்ளல் வீட்டு மடைப் பள்ளியின் நெருப்பு அணையப் பார்த்தவர் இல்லை. வடிப்பதற்குப் பத்துப் பேரும், படைப்பதற்குப் பத்துப் பேரும், இலை எடுப்பதற்குப் பத்துப் பேரும் வெற்றிலை பாக்கு கொடுப்பதற்குப் பத்துப் பேரும் எப்பொழுதும் இருப்பர்.

## விருந்தினருக்கு எளியர்

உணவுண்டு முடிந்ததும் வந்தவர்களுக்குப் பேட்டி கொடுப்பார். பல வகையினர் இவரைக் காண வருவர். காண வருபவர்களுக்கு அவர் அவர்களுக்குத் தக்க மரியாதையுடன் முகமலர்ந்து உபசரித்து இயன்ற உதவிகளைத் தட்டாது செய்து அனுப்புவார். இவருடைய கம்பீரமும் முகமலர்ச்சியும் கண்டவர் பரவசமாகி விடுவர்.

## நீதிபதி

மனோதத்துவம் மனோவசியம் கற்றவராகையாலும், கருத்தறிந்து பேசும் ஆற்றல் படைத்தமையாலும், எத்தகையோரும் இவர் தீர்ப்பை ஏற்றுக்கொள்வர். நடுநிலையில் நின்று தீர்ப்பு வழங்குவார். இருவர்தம் சொல்லையும் எழுதரம் கேட்டே இருவரும் பொருந்த உரைப்பது இவர் பண்பு. இவர் தீர்ப்புக்கு எல்லோரும் பணிந்தே ஆகவேண்டும்.

முறையூர் வட்டாரத்து மக்கள் வழக்கு மன்றம் ஏறவேண்டிய அவசியமே இல்லாதிருந்தது. அவ்வாறு ஊர் மக்களையெல்லாம் நன்னெறிப் படுத்திய இவரே, கடைசிக் காலத்தில் கடனுக்காக வழக்கு மன்றம் ஏற நேரிட்டது.

## உடை வழங்குதல்

ஆண்டுதோறும் பொங்கல், தீபாவளி முதலிய விசேஷ நாட்களில், புலவர்களுக்கும், வேலையாட்களுக்கும், இரவலர்க்கும் வேட்டி, சேலைகளுக்குச் சீட்டுக் கொடுப்பார். இவர் கொடுக்கும் சீட்டுக்குத் துணி கொடுப்பதற்காகவே மதுரையில் ஒருவர் துணிக்கடை வைத்திருந்தாராம். இவ்வாறு

இவர் தரும் சீட்டுக்கள் ஆண்டுக்கு ஆயிரக்கணக்கில் இருக்குமாம். இந்த துணிக்கடைக்காரர் பின்னாளில் முறையூரிலேயே கடைவைத்து விட்டார்.

## பிராணிகள்

உழவுக்கு உதவும் ஆடுமாடுகள் மட்டுமின்றி, கோழிகளில் கிண்ணிக்கோழி, வான்கோழி, காட்டுக் கோழி,கருங்கோழி எனப் பலவகைகளை வளர்த்தார். குதிரைகள், பந்தய மாடுகள், மஞ்சுவிரட்டுக் காளைகள், நாய்கள் முதலியவை ஏராளம். பஞ்ச வர்ணக் கிளிகள் நூற்றுக் கணக்கில் இருந்தன. முள்ளம் பன்றி, வேங்கை, சிறுத்தை முதலிய கொடிய விலங்குகளும் இருந்தன. இப்படி ஆயிரம் ஆயிரம் உயிர்களை வளர்ப்பதற்கு எவ்வளவு ஆட்கள் வேண்டும்? எவ்வளவு பணம் செலவாகும்? இதை நினைக்கும்போது வியப்படையாமல் இருக்க இயலாது.

இவை மட்டுமா? ஏராளமான மயில்களையும் வளர்த்து வந்தார். அபூர்வமான வெள்ளை மயில் களும் இவரிடம் இருந்தன. நாலாயிரம் புறாக்களும் இவர் மாளிகையில் வாழ்ந்தன. மாதந்தோறும், இப்புறாக்களின் தீனிக்காக ஐந்து கலம் தானியம் செலவாகும். புறா மணத்தால் வாதநோய் வராது என்பதால் இவர் புறாக் கூண்டருகில் சென்று இருப்பார். ஆயினும் அந்த வாதநோயே இவர்க்கு முடிவைக் கொடுத்தது.

## தப்பியோடிய புலி

இவர் ஒரு புலியையும் வளர்த்து வந்தார். அந்தப் புலி ஒரு சமயம் எப்படியோ தப்பியோடி விட்டது. வேந்தன்பட்டியில் ஒரு செட்டியார்

வீட்டுச்சமையற்கட்டில் சென்று புகுந்துகொண்டது. ஆட்கள் பலரை அனுப்பி, பல பக்கங்களிலும் தேடி, பிறகு அப்புலியைக் கண்டு பிடித்துக் கொண்டு வரச் செய்தார்.

## வண்டிகள்

இவர் வைத்திருந்த வண்டிகள் தாம் எத்தனை? எத்தனை வகை? திருநெல்வேலியிலிருந்து தச்சர் களை வரவழைத்து கூட்டு வண்டிகளைச் செய்து வைத்திருந்தார். பழனி, வைத்தீசுவரன் கோவில் போன்ற திருப்பதிகளுக்கு பதினைந்து, இருபது நாள் வண்டிப் பயணம் செய்து இறைவனை வழிபட்டு வருவார்.

பெண்கள் பயணம் செய்ய படுதா போட்ட பொட்டி வண்டிகள் இருந்தன. சமீபதூரம்போய்வர கூட்டு வண்டிகளும், தொலை தூரம் போய்வர குதிரைச் சாரட்டு வண்டிகளும் உண்டு. பந்தயத்துக் காகத் தட்டு வண்டிகளும் வைத்திருந்தார். குப்பை கூளம் அடிக்க மொட்டை வண்டிகளும், நெல் முதலியன கொண்டுவர கூடு கட்டிய பாரவண்டி களும் அநேகம் இருந்தன. இந்த வண்டிகளைப் பழுது பார்க்கும் செலவு, ஓட்டுகின்ற ஆட்கள் சம்பளம் முதலியவற்றுக்காகப் பெரும்பணம் செலவிட்டு வந்தார்.

## ஆட்பெரும் படை

வேலையாட்களுக்கோ கணக்கேயில்லை. சமையலுக்கென்றும், வீடுகூட்டிப் பெருக்குவதற்கும் தோட்டம் பார்ப்பதற்கும், உழவுத் தொழில் செய் வதற்கும், கங்காணத்துக்குப் போவதற்கும், நெல் அளப்பதற்கும், வண்டி ஓட்டுவதற்கும், வண்டியின்

பின்னால் தொட்டு ஓடி வருவதற்குப், விசிறி இழுப்ப தற்கும், பந்தி விசாரணை செய்வதற்கும் பலப்பல ஆட்களை நியமித்திருந்தார்.

கணக்குகள் எழுதுவதற்கும், கிராமக் காரியங்கள் பார்ப்பதற்கும், பல பிராமணர்களை அமர்த்தியிருந்தார். இவர்களுக் கெல்லாம் அக்கால முறைப்படி சம்பளமும், சாப்பாட்டுக்கு நெல்லும் கொடுக்க வேண்டும். தீபாவளி சங்கராந்தி சன்மான மும் கொடுத்து உபநயனம், கன்னிகாதானம், ஸ்ரீமந்த செலவுகளை இவரே ஏற்பார். ஒப்படி செய்யப் படும் களத்திலேயே ஊர்ப் பொதுவுக்கும், தர்ம ஸ்தாபனங்களுக்கும், தோட்டிக்கும், கிராமத் தொழிலாளிகளுக்கும் நெல்லும் அரிசியும் வழங்கப் படும்.

இவர் வேலையாட்களிடம் கண்டிப்பாக வேலை வாங்குவார். சிறு தவறு நேர்ந்தாலும் சினந்து கண்டிப்பார். ஆனால் அடுத்த கணமே இன்முகம் காட்டி ஆதரிப்பார். கொழும்பு, சென்னைக் கடை களிலே வேலை பார்த்தவர்களுக்கு சம்பளமும் சாமானும்[1] தாராளமாக வழங்கினார் அவர்களிலே சிலர் இன்றும் சிறப்புடன் வாழ்ந்து வருகின்றனர்.

## ராமநாச்சியார் தோப்பு

வள்ளல் குடும்பத்தினர்க்குப் பரம்பரையாகவே நன்செய், புன்செய், தோப்பு, துறவுகள் மிகுதியாக இருந்தன. சொந்தமாகவே பண்ணையைக் கவனித்து வந்தார். குத்தகைக்கு ஒப்புக் கொண்ட கிராமங் களிலிருந்து நெல்லாகவும், பணமாகவும் வாங்கி வந்தார்.

---

1. தொழிலில் கிடைக்கிற லாபத்தைக் கொண்டு தரப் படும் 'போனஸ்' போனஸைக் கொண்டு நகை நட்டு வாங்கு வதால் இதற்குச் சாமான் பணம் என்று பெயர் வந்தது.

வள்ளலுக்குத் தோட்டம் வளர்ப்பதில் அலாதிப் பிரியம். முறையூரிலே ஒரு தோட்டம் வைத்திருந்தார். கரடிப்பட்டி என்ற ஊரில் ஒரு பெரிய தோப்பை அபிவிருத்தி செய்ததுடன், பெற்ருேர் இருவர் பெயரையும் இணைத்து, 'ராமநாச்சியார் தோப்பு' என்று ஒரு புதிய தோப்பும் உண்டாக்கினர். தென்னை, பலா, கமுகு முதலிய பல மரங்களையும் வளர்த்தார். இன்னும் தமது மாளிகைத் தோட்டத்தில் மேல் நாட்டுப் பாணியில் குரோட்டன்ஸ் என்னும் அழகுச் செடிகளை சீமையிலிருந்தும், சென்னையிலிருந்தும் வரவழைத்துப் பயிர் செய்தார். இதற்காக ஏராளமான பொருளை செலவிட்டார். இதற்கு ஓயாது தண்ணீர் வார்க்க ஒரு பெண்கள் பட்டாளத்தை மாதச் சம்பளத்தில் அமர்த்தியிருந்தார்.

## கலை மாளிகை

மாலை நேரத்தில் பொழுது போக்குவதற்கும் கலை நிகழ்ச்சிகளுக்குமாக தனியாக ஒரு பங்களாவைக் கட்டினர். அங்கே ஒரு செயற்கைக்குளம் உண்டாக்கினர். மாலை நேரங்களில் பலவித கலை நிகழ்ச்சிகள் நடைபெறும். அந்த வட்டாரமக்கள் அனைவரும் கண்டு மகிழ்வர். இளமையிலிருந்தே ஓவியத்தில் ஆர்வம் உடையவர். ஆகையால் ஆயிரக் கணக்கான புகைப் படங்களும், ரவிவர்மா போன்ற தலைசிறந்த ஓவியர்களுடைய படைப்புக்களும் வாங்கி வீட்டைக் கலை நலம் பொலியச் செய்தார். அபூர்வமான பொருள் என்ருல் என்னவிலையானுலும் உடனே வாங்கி விடுவார். பல கண்காட்சிகளுக்கு அரிய கலைப்பொருட்களை அனுப்பிப் பரிசுகள் பல பெற்றுள்ளார். பல்லாயிரம் நூல்களைச் சேகரித்து வைத்திருந்தார். அவர்பிற்காலத்தில் அந்தநூல்கள் சொற்ப விலைக்குத் தள்ளப்பட்டு, சேரவேண்டிய இடத்தில் சேர்ந்தன.

அக்காலத்தில் இவரைப்போல குபேரவாழ்க்கை வாழ்ந்தவர் மிகச் சிலரே இருந்திருக்கலாம்.

## தாயன்பு

வள்ளலுடைய தாயார் நாச்சம்மையாச்சி தாராள மனப்பான்மையும் இளகிய சுபாவமும் படைத்தவர். சுவீகாரத் தாயார் — சின்னையா செட்டியார் மனைவி—அழகம்மை ஆச்சி இறுக்கிப் பிடிக்கும் சுபாவமும், செருக்கும் வாய்ந்தவர். இருவரும் சுபாவத்தில் இரு வேறு துருவங்கள். ஆயினும் சண்முகனர் இருவரையும் சமமாகவே கருதி பணிவிடைகள் செய்து வந்தார். அழகம்மை ஆச்சி இறந்த பிறகு, நெடுநாட்கள் வரை நாச்சம்மை ஆச்சி இருந்தார்.

அழகம்மை ஆச்சி மிகவும் நோய்வாய்ப்பட்டு இருக்கையில், இனி பிழைப்பதரிது எனக் கருதிய சண்முகனர் அவரை மிகச் சிறப்பாக அடக்கம் செய்ய வேண்டும் என்பதற்காக முன் கூட்டியே தம்பட்டம், பறை, உறுமி முதலிய சோகவாத்தியங் களுக்கு ஏற்பாடு செய்து ஒரு ரதம் போலவே சிங்காரித்து பலமுறை ஒத்திகை பார்த்து அவர் உயிர் பிரிந்த பிறகு வெகு கோலாகலமாக இறுதிக் கிரியைகளை நடத்தினர். பிரேத ஊர்வலத்தைக் காண அக்கம்பக்கத்துக் கிராமமக்கள் ஏராளமாகக் கூடியிருந்து ஒரு திருவிழாவைப் போல் கண்ணுற்றனர்.

# 7. புலவர் புரவலர்

> "பலாவின் கனிச்சுளை வண்டியில் ஓர்வண்டு
> பாடுவதும் வியப்போ?"

என்று கேட்டார் பாரதியார்.

அள்ளிஅள்ளி வழங்கும் வள்ளல்களைப் பெற்றால் புலவர் உள்ளம் துள்ளுவது இயல்புதானே!

வரையாது வழங்கும் வள்ளல் சண்முகனாரின் கொடைப் புகழ் நாடெங்கும் பரவியது. கனிமரம் கண்ட பறவைகள் போல, மதுக்குடம் கண்ட வண்டுகள் போல நாடெங்குமுள்ள நாவலரும் பாவலரும் சண்முகனாரிடம் வந்து பரிசு பெற்றுச் சென்றனர். சிலர் ஆண்டுக் கணக்காக அவருடன் தங்கி அளவளாவி யிருந்தனர். வள்ளலின் ஆஸ்தானப் புலவர் என்று கூறிக் கொள்வதில் பெருமை கொண்டவர் பலர். நேரில் வந்து காணமலே, சீட்டுக் கவி அனுப்பி உதவி பெற்றவர் அநேகர். சண்முகனாருடன் வாழ்விலும் தாழ்விலும் இடையறு நட்புக் கொண்டவர் எண்ணிலர்.

வள்ளலின் சபை எந்நேரமும் புலவர்களால் நிரம்பி அணி செய்தது. சிறு பிரபந்தங்கள் பல அரங்கேறின. இனிப்பான தனிப்பாடல்கள் பல பாடப் பெற்றன. இலக்கியச் சொற்பொழிவுகளும், ஆராய்ச்சிகளும் நிகழ்ந்தன. அங்கு சென்றவர்களுக்குப் பொழுது போவதே தெரியாது.

ஆஸ்தானப் புலவர்களுக்கு மாதக் கட்டளையாக நெல், பணம் முதலியன தரப்பட்டு வந்தன. மற்றவர்களுக்கு பாட்டுக்கேற்ற சன்மானம் அவ்வப் போது கிடைக்கும். சில புலவர்களுக்கு மணியார்டர் மூலம் பணம் அனுப்புவதும் உண்டு. சில புலவர்கள் தங்கள் மக்களுக்கு திருமணச் செலவுக்காகப்

பணவுதவி பெற்றுள்ளனர். வருடத்துக்கு வேண்டிய நெல் முதலியன வாங்க மொத்தமாகப் பணம் பெற்றவரும் பலர். பாடிவந்தவர் வெறுங்கையுடன் மீண்டது கிடையாது.

புலவர்களுக்கு உணவு படைப்பதற்கென்றே ஒரு சாப்பாட்டு விடுதி இருந்தது. இதை ராமுடு ஐயர் என்னும் அந்தணர் நடத்தி வந்தார். வரும் புலவர்களுக்கு வள்ளல் சீட்டுக் கொடுத்து விடுவார். அச் சீட்டுகளுக்கு அங்கு சாப்பாடு கிடைக்கும். அந்த ஐயரின் மனைவியை மொட்டைத் தலைச்சி அம்மாள் என்றே அழைப்பார்கள். அவளைப்பற்றி வேடிக்கையாக வீமகவி முதலிய புலவர்கள் பாடியுள்ளனராம்.

வள்ளலுடன் தொடர்பு கொண்ட புலவர்கள் நூற்றுக்கணக்கானவர். அவர்கள் அனைவரையும் பற்றி எழுதுவதாயின் மிக மிக விரியும். ஒரு சிலரைப் பற்றி மட்டும் இங்கே குறிப்பிடுவோம்.

## கொட்டாம்பட்டி கருப்பையாப் பாவலர்

கருப்பையாப் பாவலர் மதுரை மாவட்டம், மேலூர் வட்டம், கொட்டாம்பட்டியில் 1864ம் ஆண்டு யாதவர் மரபில் பிறந்தவர். தந்தையார் பெயர் மருதக் கொத்தனார். சிறு வயதிலேயே கவிபாடும் ஆற்றல் பெற்றவர்; மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவர்; இனிமையாகவும், விரைவாகவும் கவிபாடுவார்; 1907-ஆம் ஆண்டு அமரரானார். இருபத்தைந்துக்கு மேற்பட்ட பிரபந்தங்களும், நூற்றுக் கணக்கான தனிப்பாடல்களும் பாடியுள்ளார். முறையூர் மீனாட்சிசுந்தரேசுவரர் பிரபந்தத் திரட்டு என்னும் நூல் வள்ளல் சண்முகனார் உதவியால் அச்சாகியது.

இவர் வள்ளலின் திருமாளிகைப் புலவராக இறுதி வரை விளங்கியவர். வள்ளலின் தந்தையார் இராமன் செட்டியார் அமரரான போது, இவர் மனமறுகிப் பாடிய பாடல்கள் "சரம கவிதா மஞ்சரி" என்ற பெயருடன் அச்சிடப்பட்டுள்ளது. அது சொற்சுவை, பொருட்சுவை மிக்கு, படிப்பவர் கண்களில் நீர்துளிர்க்கச் செய்கிறது.[1]

வள்ளல் சண்முகனார் விருப்பப்படி புலவர் பெருமக்கள் பாடிய தனிப்பாடல்களை யெல்லாம் திரட்டியவர் இவரே! இவர் அமரரான பிறகு மு. ரா. கந்தசாமிக் கவிராயர் மேற்பார்வையில் அந்நூல் வெளியிடப் பெற்றது. வள்ளலிடமும் அவர் தந்தையாரிடமும் இவர் கொண்டிருந்த பற்று அளவிடற்கரியது.

வள்ளலுடைய இரண்டாவது திருமண நிகழ்ச்சி பற்றி இவர் பாடிய பாடல்கள் மிகவும் நயமுடையன. வள்ளல் பேரில் இவர் பாடிய பாடல்களும் அளவிடற் கரியன.

கருப்பையாப் பாவலர் இறந்த பிறகு பாவலருடைய குமாரரைத் தமது சேய்போலக்கருதி வள்ளல் பாதுகாத்து வந்தார். இதை மு. ரா. அருணாசலக் கவிராயர்,

"பூவலர்பைம் பொழிற் கொட்டாம் பட்டிநகர்க்
கருப்பையாப் புலவர் என்னும்
பாவலர்மேல் வைத்திடும்அன்(பு) அவர்மகனார்
மேல்வைத்துப் பாது காத்தாய்"

என்று வியந்து பாராட்டியுள்ளார்.

## மு. ரா. கந்தசாமிக் கவிராயர்

மு. ரா. அருணாசலக் கவிராயருடைய இளைய சகோதரர் கந்தசாமிக் கவிராயர். தமது தந்தையார்

---

1 இந்தச் சரம கவிதா மஞ்சரி இந்நூலில் அனுபந்தமாகச் சேர்க்கப்பட்டுள்ளது.

இராமசாமிக் கவிராயரிடமும், திருவாவடுதுறை நமசிவாயத் தம்பிரானிடமும் கல்வி பயின்றவர்; உடுமலைப்பேட்டை கழக உயர்நிலைப்பள்ளியில் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றியவர். பிறகு மதுரையில் விவேகபானு அச்சகம் ஏற்படுத்தி "விவேகபானு" என்னும் பத்திரிகை நடத்தி வந்தார். சில சிறு பிரபந்தங்கள் இயற்றியுள்ளார். சண்முகனார் பால் அன்புகொண்டவர். சண்முகனார் வேண்டுகோளுக்கு இணங்கி குமணனுடைய வரலாற்றை குமண சரித்திரம் என்ற பெயரில் விருத்த யாப்பால் பாடி, வள்ளலுக்குச் சமர்ப்பணம் செய்துள்ளார். இந் நூலின் ஒரு சில பகுதிகள் பள்ளியிறுதித் தேர்வுக்குப் பாடமாயுள்ளன.

கொட்டாம்பட்டி கருப்பையாப் பாவலர் தொகுத்திருந்த தனிப்பாடல்களுடன், மேலும் சில, பல பாடல்களைத் தொகுத்து தனிச்செய்யுட் சிந்தாமணி என்ற பெயரால் வள்ளல் சண்முகனாரின் விருப்பப் படி அச்சேற்றியவர் இவரே. குமண சரித்திரத்தின் தொடக்கத்தில்,

"திருவளரும் வளமுறைசை நகர் உள்ளும்
புலவர் உள்ளும் தினமும் வாழும்
தருவளரும் கொடைமருவும் சண்முகமா
லே! நினது தகுதிக்கு ஏற்ப,
மருவளரும் தொடைக்குமண சரிதஇயல்-
தமிழ்மகளை மணம்செய் வித்தேன்-
உருவளரும் உரிமையொடு மருவி, இசை
மகப்பேறுஉற்று உவக்க என்றே.

என்று வள்ளலைப் பாராட்டி உரிமையாக்கியுள்ளார். மேலும் அந்நூலின் முடிவில்,

"அக்குமண னேஇவன்என்று
அவனிஎலாம் சொலற்குஏற்ப
இக்கவிநூல் தனக்குஉரிமை
எய்துபெரும் புகழாளன்;

முக்கனியின் சாறுகமழ்
முறைசைநகர் வாழ்மகிபன்;
தக்கபெருந் தகை; எங்கள்
சண்முகமால் வாழியவே!''

என்று வாழ்த்தி முடித்துள்ளார்.

## மு. ரா. அருணசலக் கவிராயர்

முகவூர் இராமசாமிக் கவிராயருடைய மூத்த புதல்வர். சேற்றூர்ச் சமஸ்தான வித்துவான். திருவாவடுதுறை நமசிவாய தேசிகரிடம் இலக்கிய, இலக்கணங்கள் கற்றவர். நெடுங்காலம் சிவகாசியில் வாழ்ந்தவர். மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவர். பதினைந்துக்கு மேற்பட்ட பிரபந்தங்களை இயற்றியுள்ளார். பல உரைநடை நூல்களும் எழுதியுள்ளார். தமிழ்ச்சங்க நூலாய்வாளராகப் பொறுப்பு ஏற்றிருந்தார். நமது வள்ளல் மீது பேரன்பும் பெருமதிப்பும் கொண்டவர்.

''என்போலும் புலவர்பலர் உனக்குஉள்ளார்;
என்றாலும் ஈயும் வள்ளல்
உன்போலும் ஒருவர்இந்த உலகம்எல்லாம்
பார்த்தாலும் உண்டோ சொல்லாய்!''

என்பது வள்ளலார் மீது இவர் பாடிய பாட்டில் சில வரிகள்.

தமது புதல்வருடைய திருமணத்துக்குப் பொருளுதவி கோரி இவர் ஒரு நீண்ட சீட்டுக் கவி எழுதியுள்ளார். முப்பத்து மூன்று பாடல்களையுடைய அதில் வள்ளலுடைய வண்மையைப் பலபடப் பாராட்டியுள்ளார். சுவையான பாடல்கள் அவை.

''தேசுந் தராநிகர் சிற்றிடைமாதர் தினம்விரும்பு
மாசுந் தராவென் றழகின ரைச்சொலி வாழ்த்தினும்ஓர்
காசுந் தரார்முறை யூர்வளர் சண்முககாம! நன்கு
பேசுந் தராதர முந்தெரியார்அவர் பேதையரே.''

என்பது அவற்றில் ஒன்று.

## சே. ரா. சுப்பிரமணியக் கவிராயர்

இவர் மு. ரா. அருணுசலக் கவிராயரின் சகோதரர். திருவாவடுதுறை ஆதீன வித்துவாகை இருந்து பல தம்பிரான்களுக்கும், பிறர்க்கும் தமிழ் கற்பித்து வந்தவர். மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் சைவநூற்பரிசோதகராக இருந்தார். வில்லிபாரதம், ஞாஞமிருதம் முதலிய சில நூல்களே விசேடக் குறிப்புகளுடன் அச்சிட்டுள்ளார். சில பிரபந்தங்கள் இயற்றியுள்ளார்

நமது வள்ளல் அவர்களைக் காணவரும்போது நீண்ட சீட்டுக் கவியொன்று எழுதியிருந்தார். அதில்,

''பெறுநன்றி யிலர்பிதா சோதரர்கள் ஆயினும்
பெரிதுஉள் வெறுத்து விடுவோம்;
பிசிஉரைக் கிலம்; அஃது உரைப்பார்கண் அன்பிலோம்;
பிங்கலன் போல் செல்வராய்
ஏர்கொண்டு இருக்கின்ற கல்வி அறிவு இல்லரேல்,
எள்ளளவும் என்றும் மதியோம்;
இயம்பும்முன்,பின்உள்ள கவிஞர்போல்பொருள்வேண்டி
எவர்மீதும் நற்கவி சொலோம்''

என்று தன்னைப் புகழ்ந்து கூறுகின்றுர். வள்ளல் மீது இவர்பாடிய பாடல்கள் மிகவும் சுவையுடையன.

## பாலகிருஷ்ண கவிராயர்

பாலகிருஷ்ண கவிராயர் முறையூரில் பிறந்தவர். பாலகிருஷ்ண பாரதியார் என்றும் அழைப்பதுண்டு. அந்தணர் மரபினர். சண்முகனுருடைய தந்தையா ராகிய ராமன் செட்டியார் மீது காதல் பிரபந்தம் என்னும் சிறந்த நூலே இயற்றியுள்ளார். சொல்லணி, பொருளணிகளால் சிறந்து விளங்கு கிறது அந்நூல். இவர் சண்முகனுரின் அத்தியந்த அன்புக்குப் பாத்திரமானவர். முறையூர் மீனுட்சி

சுந்தரேசுவரர் கோவில் வேத அத்தியயன உரிமை பெற்றவர். சேதுசமஸ்தானத்தில் வீரதோடா மரியாதை பெற்றவர்.

ஒரு சமயம் முறையூரில் மழையே பெய்யாமல் பொய்த்தது. குடிநீரும் கிடைக்காமல் மக்கள் பேரவதியுற்றனர். ஊரிலுள்ள கிணறுகள் அத்தனை யும் வறண்டு போயின. ஊரார் துன்பம் கண்ட சண்முகனர் தமது செலவில் கிணறு ஒன்றை ஆற்று நடுவில் வெட்டுவித்தார். இவருடைய கைராசி யினல் அக்கிணற்றில் வற்ருத நீர் ஊறியது. ஊர்மக்கள் உவகை கொண்டனர். அச்சமயம் பாலகிருஷ்ண கவிராயர் சில செய்யுட்களைப் பாடி வள்ளலைப் பாராட்டினுர். அவற்றில் ஒன்று,

"விண்முகத்தி னின்றுஈசர் சடையின் மீது
விளங்கிவரு கின்றகங்கா நதியைப் போலும்,
பண்முகப்பா வலர்இன்சொல் சுவையைப் போலும்,
பங்கயமின் உலவும்முறைப் பதியின் மேவி,
எண்முகத்தும் கீர்த்திபுனை இராம நாதன்
எனும்வணிகப் பூமான்தன் இதயம் போலும்
சண்முகப்பேர் வாய்ந்தசய தீரன் செம்பொன்
தனிநிதியால் சலநிதி தனைக்கண் டோமே"

வள்ளல் சண்முகனுரின் தந்தையார் ராமன் செட்டியார் சத்துரு சங்காரக் கோட்டை என்னும் ஊரில் தர்மசத்திரம் ஒன்று கட்டுவித்தார் என்று முன்பே கூறியுள்ளோம். அப்போது பாலகிருஷ்ண கவிராயர் பாடிய நீண்ட கவிதை இது:

"திருமருவு முறைசைவளர் மீனலோசனவல்லி
சேவடி வணங்கி ஏத்தித்
திகழ்பழனி யப்பவணிகேந்திர சுதாகரன்
செய்தவத் தால் உதித்த
செல்வனும் சுப்ரமணி யக்குரிசில், சின்னையா,
சீலமுறு பழனி யப்பன்
சீரான மூவர்க்கும் அநுசன்என ஓங்கி, ஆண்
சிங்கடா கைகள் செலுத்திப்

பருவரதி மதன, மார்க்கண்ட சிவபத்திப்ர
தாபசெய துங்கன் என்னப்
பாருலகு ளோர்துதித்து அகம்மகிழ நற்கீர்த்தி
பாலனம் செய்து எந்நாளும்
பணிலங்கள் அடர்சத்ரு சங்கார நகர்மீது
பரிதிமதி உள வரையிலும்,
பண்புமிகும் அ(ன்)னசத்ர தர்மப் ப்ரதிஷ்டையும்
பண்ணி மனு விற்சிறந்து
தருஐந்து நாணமுற எக்கால வேளையும்
சந்தோஷ கரமாகவே
'தா' தா!' எனப் பகரும் ஆதுலர்க்கு உதவுரவி
தனயனும் கர்ண சமுகம்
தன்உயிர் எனப்புவனி மன்உயிரை ரட்சணைசெய்
தர்மராஜேந்திர சமுகம்
சத்யமொழி நிறைவுறப் பாலித்த குண அரிச்
சந்த்ரபூ பதியின் சமுகம்
கருணைதவ ருமலே சரண் அடைந் தோர்களைக்
காக்கும் மகராச சமுகம்
'காதல்' எனும் நற்றமிழ்ப் பாமாலை சூடிஎக்
காலும் மகிழ் பாலகிருஷ்ண
கவிராய னுக்கு நவ நிதியாதி ஈந்துகுடி
காக்கின்ற வள்ளல் சமுகம்
கனகன் ஒப்புஅணையசய ராமநாதப் பிரபு
காண்டிபன் சமுகம் இதுவே''

மற்றொரு சமயம் தமது மகன் கல்யாணத்துக்குப் பொருளுதவி வேண்டுமென்று கேட்டுச் சில பாடல்கள் பாடியுள்ளார். அவற்றுட் சில:

"தாசரதி தாய்மகனு சைவரன்றேர் ஓட்டுவர்பெண்
நேச! இவைநடுவை நீதருவாய்! பேசஎடுத்-
துப், பிடித்துக் கண்துயின்று தோன்றி அளந்து உகுத்த
சற்புருட ராம நாதா!

"நற்புகழ்சே ரும்முறைசை ராமநா தேந்திரனும்
கற்பகம்பார்த் தால்என் கலிதீரும்; அற்புதம் சேர்
கற்றபுல வோரைக் கனவினிலும் எண்ணாத
மற்றவர்பார்த் தால்தீருமா?

"நந்துலவும் தென்முறைசை ராமநா தேந்திர! நின்
சந்ததிகள் யாவும் தழைத்திட என் மைந்தனுக்குப்
பூதானம் மேலாய்ப் புகலுகின்ற பூண்கன்னி
காதானம் செய்தாய் கனிந்து''

ஒருகால் ராமன் செட்டியார் அவர்கள் சில சித்திரக் கவிகள் பாடும்படி வேண்டினர்கள். அவர் வேண்டுகோளின்படி பதினறு சித்திரக் கவிகள் பாடினர் கவிராயர். அதில் கட்கபந்தக் கவி இது.

''மாகனக யோகதனு மானேமா னுவலவ
னுகரிக மோகனமன் னுதனே கோகனக
மாதாதா மாமுறைவாழ் மாவணிகா மாமணியே
தாதாநீ ராமநா தா !''

வள்ளல் சண்முகனர் பேரில் இவர் பாடிய பாடல்களில் சில.

''சுபகுண கணங்கள்நிறை தருசின்னைய நன்பன்அருள்
சுதன்இலகு சண்முகம் எனும்
விபவம் உள சுந்தரனை அனுதினம் நினைந்துதுதி
விபுதகவி வேதியனை நீ
இபமுனம் மகிழ்ந்துவரு பசியமுகில் சுந்தரனும்
இவன் என உகந்து புவியோர்
சபதம் இடுகின்றபடி நினைவுகள் தெரிந்து உதவு
தருணம்இது கண்டு கொள்கவே!''

''முறையூர் என்னும் வளம்பதியில்
முகிலாய் வளர்சின் னையவணிகன்
முதிரும் தவத்தின் பலன்தானே
முதன்மைப் புதல்வன் ஆகி வந்தோன்.
தறையோர் புகழ்இச் சண்முகவேள்
தயவுக்கு இசைந்தாய்! அடி! மகளே!
சரசம் புரிந்து நயம் பேசிச்
சந்தக் களபங் கற்பூரம்
மிறையே அகலப் பூசி மலர்
வேய்ந்து வெள்வெற் றிலைதுவர்க்காய்
விரைந்து கொடுத்துக் குளிர் மகர
வீணை வண்ணங் களைமீட்டிக்
குறைவு தீர்க்கும் கற்பத்தில்
கூறும் வல்லி சாதம்எனக்
குன்றும் இரண்டு புயங்கள்எனும்
கொழுகொம்பு ஏறி வாழ்வாயே!''

வள்ளல் தம்பி கருப்பன் செட்டியார் என்னும் சேது செட்டியார் பேரிலும் கவிராயர் சில பாடல்கள் பாடியுள்ளார். அவற்றுட் சில :

சதுரங்கபந்தக் கவி

தக்கபுகழ்ர் முறைசை தன்னில் வணிகமணி
மிக்கமா மேரு வியப்பறிந்தோன் ஒக்க
வருதிபனச் செயாகு மாராம நாதன்
தருசேது பூமன் இவன் தான்

ரதபந்தக் கவி

காணிமுறை சைக்கரசே காங்கயன்னே ராய்சமுகங்
காணில்வன சைப்பதிமாக் கற்பகமும் நாணியுறும்
நன்னயவா னேகனகன் ராமநாதன்பெற்ற
கன்று கருப்பவணி கா!

மேற்படி கருப்பன் செட்டியார் இப்புலவருக்கு ஒரு பாற்பசு வழங்கினுர். அப்போது இவர் பாடிய கவி :

"மீனவளார் முறைசைநகரத்தில் மேவி
விளங்குவணிக உத்தமரில் விசயன் நேராம்
தானகர்ணன் எனும்ராம நாத வள்ளல்
தவசுதனம் மால் கருப்பன் செட்டி பூமான்
மானபரன் பாலகிருஷ்ண கவிக்கு இந்நாளில்
வதிட்டசுரபிக்குமேல் எனவழுத்த
வானவர்கோன் அகம்மகிழத் தந்து சிந்தா
மணிஎனவே வாழ்வுற்று வளர்கின்ருனே"

## பீமகவி

குன்றக்குடிக்கு அருகேயுள்ள செந்நெற்குடி என்னும் சிறுகூடல்பட்டி என்ற ஊரில் பிறந்தவர். திருவாவடுதுறை நமசிவாய தேசிகரிடம் கல்வி கற்றவர். சிறுபிரபந்தங்கள் பல பாடியுள்ளார். வள்ளல் சண்முகனுரிடம் நெருங்கிய நட்புப்பூண்ட புலவர்களில் முதல்வர். கீழச்செவற்பட்டியில் வாழ்ந்தவர். சண்முகனுர் மீது பல இனிமையான பாடல்கள் பாடியுள்ளார். விஷ்ணுபுராணம், திருக்கோட்டியூர் சௌமியநாராயண பிள்ளைத் தமிழ் என்ற நூல்களை இயற்றிய சே. சுப்பராய ஐயரின் இளைய சகோதரராவர். சத்துருசங்கரரக் கோட்டை சத்திரச் சாப்பாட்டைப் பற்றி இவர் பாடிய பாடலை முன்பே படித்துள்ளோம்.

ஒரு சமயம் சில புலவர்கள் கூடி இக்காலம் கொடையாளிகளே இல்லை. அக்காலத்தில் வட மொழிக்கு போசனும், தென்மொழிக்கு குமணனும் இருந்தது போல இக்காலத்தில் உண்டா என்று கூறியபோது இவர்,

வனப்புறு வடசொற் கவிச்சுவை உணர்ந்து
வழங்குவான் போசனும் என்றும்,
இனிப்புறு தென்சொற் கவிக்குநற் குமணன்
எண்பொருள் ஈகுவான் என்றும்
தனித்தமிழ்ப் புலவர் வடமொழிப் புலவர்
சாற்றுவர். தண்பொழில் முறைசை
வனிதையர் அணையும் சண்முக முதல்வன்
மான் அவை கண்டவர் மதியார்.

"தண்தமிழ்ப் புலவீர்! முறைசைமா நகரில்
சார்ந்திடும் சண்முக வள்ளல்
அண்டர்வண் தருவின் அம்சமாம் விரல்கொள்
அய்யனை அருந்தமிழ் வைப்பைக்
கண்டபோது உமது மிடிக்கடல் ஏகும்.
கவிமழை பொழிந்திடில் மற்றும்
எண்தரு பெருமை உரைப்பதற்கு என்நா
ஏகமே இடர் இலை எழுவீர்.

"மற்றும் அம்முதல்வன் வதிஅவை தனக்கு ஓர்
வண்குறி வழுத்துவன் கேண்மின்!
பொற்றொடி மகளிர் ஒருபுறம் நடிப்பர்.
புங்கவர் வாழ்த்து ஒரு புறமாம்.
கற்றவர் கவிகள் ஒருபுறம் ஒலிக்கும்.
கானமே ஒருபுறம் கலிக்கும்.
அற்றவர்க்கு ஈயும் நிதிஒலி ஒருபால்
மன்னிடும். அறிந்து சென்றிடுமே!

என்று புலவர்களை ஆற்றுப் படுத்தினர்.

## வயிநாகரம் இராமநாதன் செட்டியார்

இராமநாதன் செட்டியார் மதுரை ஜில்லா அமராவதி புதூரில் பிறந்தவர். நாட்டுக்கோட்டை யார் மரபினர். மதுரையிலே வாழ்ந்தவர். புகழ் பெற்ற வயிநாகரம் பரம்பரையிலே வந்தவர். இவர்

முன்னோர்கள் கால்கோடி ரூபாய்வரை செலவு செய்து மதுரை மீனாட்சிசுந்தரேசுவர் ஆலயத்தைப் புதுப்பித்துள்ளனர். இவர் மதுரை மீனாட்சி அம்மன் தேவஸ்தானக் கமிட்டியில் தொடர்ந்து இருபத்தெட்டு ஆண்டுகள் பணிபுரிந்தவராவார். இராமநாதன் செட்டியார் பல பிரபந்தங்கள் இயற்றியுள்ளார். இவர் பாடியுள்ள இனிப்பான தனிப் பாடல்கள் சிலவற்றைத் தொகுத்து சொ. முருகப்பா அவர்கள் கவிதை மலர் என்னும் பெயரில் வெளியிட்டுள்ளார்கள்.

இவர் முயன்று தொகுத்து வைத்திருந்த குறிப்புக்களே நகரத்தார் வரலாறு என்ற நூலாக வெளிவர உதவியது.

இவர் சைவநூல்களையும், தமிழ் இலக்கண இலக்கியங்களையும் ஆழ்ந்து கற்றவர். தருமபுர ஆதீன வித்துவான். வள்ளல் சண்முகனாரிடம் மட்டற்ற அன்பு பூண்டவர். ஐந்தாம் ஜார்ஜ் முடிசூட்டு விழாவுக்கு டில்லி சென்றபோது வள்ளலுடன் இவரும் சென்று பதக்கம் பரிசாகப் பெற்றவர்.

ஒரு சமயம் சண்முகனார் முதுகில் கட்டி ஒன்று புறப்பட்டது. இதைக் கேள்வியுற்ற வயிநாகரம் துடிதுடித்துப் போனார். உடனே ஒரு கவிதைக் கடிதம் எழுதினார்.

"விண்முகம்எல் லாம்புகழும் வீயாக் கொடைபடைத்த
சண்முக நண்பா! நின் தனிஉடம்பில், புண்முகமாய்
ஓர் சிரங்கு தோன்றி உறுத்தியது, இந்நாள்காறும்
ஆர்சொலவும் கேட்டேன் அலேன்.

'அங்கயற்கண் அம்மை அணையும்மண வாளன்அடிப்
பங்கயத்தை அர்ச்சனைசெய் பான்மையால், துங்கமிகு
சாந்துபட்டர் சொல்லச்சவுக்கியம்கேட்டுக் களித்தேன்.
ஈந்தவருக்கு உண்டோ இடர்?

"இன்னமும்நம் ஆலவாய ஈசன் கருணையினுல்
பன்ன அரும்பகல பாக்கியமும், எந்நலமும்
ஆகுக! மேருக்குஇணையாய் அல்லல்வரி னும்நசித்துப்
போகுககா ளுருபனி போல்!''

என்பன அப்பாடல்கள். இவற்றில் வள்ளல்பால் இவர் கொண்டிருந்த பெருமதிப்பு விளங்குகின்ற தன்ரு ?

பல சிவாலயங்களை இவர் குடும்பத்தார் புதுப் பித்துப் பெருந் திருப்பணிகளை செய்துள்ளனர். இவர் தருமபுரம் மடாதிபதிக்கு எழுதியனுப்பிய திருப்பணி விண்ணப்பக் கவிகளில் ஒரு பகுதியைக் கீழே தருவோம்.

"துஞ்சாத புகழ்மதுரை மீனுட்சி
இறைசோம சுந்தரேசர்க்கு
எஞ்சாத திருப்பணியைக் காற்கோடி
பொருட் செலவால் இயற்றியுள்ளோம்;
அஞ்சாத படியிருபத் தெட்டாண்டு
கமிட்டியினில் அரசு செய்தேன்;
செஞ்சாலி வயல்அமரா வதிபுத்தூ
ரினிற்பிறந்து சிறந்துள்ளேனுல்.

"திருவாத வூர்,கண்ட தேவி,திருப்
பரங்குன்றம், திருப்புத் தூர்,பொன்
ஒருவாத விருத்தகிரி, திருவாப்ப
னூர்,ஒற்றி யூர்,கேடு என்றும்
மருவாத கானப்பேர், காழி,ஏ
டகம் அமரா வதிமுன் ஆகப்
பெருவாரி சிவத்தலங்கள் திருப்பணிசெய்
தேம் தருமைப் பெருமை வேந்தே"[1]

என்ற இரு பாக்களால் வயிநாகரம் குடும்பப் பெருமை விளங்குகிறதல்லவா.

---

1 1. திருவாதவூர் 2. கண்டதேவி 3. திருப்பரங்குன்றம் 4. திருப்புத்தூர் 5. விருத்தாசலம் 6. திருவாப்பனூர் 7. திருவொற்றியூர் 8. திருக்கானப்பேர் 9. சீர்காழி 10. திருவேடகம் 11. அமராவதிபுதூர் ஆகிய பதிருெரு திருப்பணிகளைச் செய்த வகையைப் பாடலின் பிற்பகுதி விளக்குகிறது.

## பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்

வள்ளல் சண்முகனார் தம் சமூகத்தைச் சேர்ந்தவர் என்பதாலும், அவர் கொடைத் திறத்தாலும் அவர் மீது பண்டிதமணிக்குப் பெருமதிப்பு உண்டு. அடிக்கடி முறையூர் வந்து வள்ளலுடன் அளவளாவுவார். வள்ளல் மறைவுக்குப் பிறகு அவரைப் பற்றி வந்தவரிடமெல்லாம் வாய் குளிர, மனங் குளிரப் பாராட்டிப் பேசுவார். வள்ளல் விருப்பப்படி வெளிவந்த தனிச்செய்யுள் சிந்தாமணி, குமண சரித்திரம் என்னும் இரு நூல்களையும் மிகமிக வியந்து பாராட்டுவார்.

## வீ. ஆறுமுகம் சேர்வை

சிவகங்கைத் தாலுகா மடைமாற்றூர்ச் சேர்க்கை செம்பூரில் பிறந்தவர் இவர். கொட்டாம்பட்டி கருப்பையாப் பாவலர்க்கு ஆருயிர் நண்பர். வள்ளல் சண்முகனாரின் திருமாளிகைப் புலவர்களில் ஒருவர். வியக்கத்தக்க முறையில் விரைந்து பாடும் திறனுடையவர்.

இவர் குடும்பம் மிகவும் வறுமையுடையது. இவருக்கு இரு மனைவியர். இதை இவர் வாக்காலேயே கேட்போம்:

> "திண்டாட்டம் யாவும்விட்டுத் தொலைந்தும்அந்தோ!
> தெரியாமல் சிறுபிள்ளைத் தனமாய் யானும்
> பெண்டாட்டி இருவர்கொண்ட பிழையால் வந்த
> பிணக்கு இன்னும் ஒழியவில்லை"

வள்ளல் சண்முகனாருக்கு இவர் எழுதிய சீட்டுக் கவிகள் மிகவும் சுவையுடையன. சண்முகனார் மதுரையில் தங்கியிருக்கையில் ஆறுமுகம் சேர்வை வந்து வள்ளலுடன் தங்கி இருந்தார். சில நாட்களுக்குப் பிறகு பெரும் பொருள் பரிசிலாகக் கொடுத்து "உன் தாய்

தந்தையர் வறுமையால் மெலிவர். அவர் வறுமை போக்க இப்பொருள் கொண்டு உடனே செல்க" என்று கூறி விடையீந்தனர். பெரும்பொருளுடன் ஊர் சென்ற புலவர் நீண்ட கடிதம் ஒன்று வள்ளலுக்கு எழுதினுர். அது முற்றிலும் செய்யுளால் ஆனது. அதில் "வள்ளலுடைய கொடைப் பொருளால் தன் வறுமைச் சனி அகன்றது" என்னும் கருத்தை ஒரு கதைபோலச் சுவைபடக் கூறியுள்ளார். அவரே கூறுகின்ருர் கேளுங்கள் :

" நீ தந்த பொருளுடன் செம்பூர் சேர்ந்தேன். எனது சிறு குடிசையில் புகுந்தவுடன் யாரோ ஒருவன் அழுது கொண்டே வெளியேறினுன். அவனே வழி மறித்து "நீ யாரப்பா? ஏன் அழுது கொண்டே செல்கிருய்" என்று கேட்டேன். அதற்கு அவன் "என் பெயர் வறுமைச் சனி. இவ்வளவு காலமும் இந்த வீட்டில் இனிதே வாழ்ந்து வந்தேன். இனிமேல் இங்கு அரைக்கணமும் வாழ முடியாது. ஏனென்ருல், கற்பகத்தை ஒத்த கரத்தனும் அருள் மனத்தனும் ஆகிய சண்முகத்தை உனக்கு ஆதாரமாகக் கொண்டு விட்டாய்" என்று கூறினுன்.

"உடனே நான் 'நெடுங்காலமாக என் வீட்டில் வாழ்ந்து, துயர் விளேத்த முடவனுகிய சனியா! இனிமேல் இப்பக்கம் மறந்துகூட நோக்காதே' என்று கடிந்து கூறினேன். அதற்கு அவன், 'இரப்போர்க்கு அள்ளி இறைக்கின்ற சண்முக மாலினுடைய இசை இவ்வுலகெங்கும் இடைவெளி யின்றி நிரம்பியுள்ளது. ஆதலால் நான் எங்கே செல்வது?' எனக் கேட்டான். "அதற்கு நான், 'நிலேயாத பொருளே நிலேயென்று எண்ணி, இரப்பவர்க்கு ஈயாமலும், நல்லோர்க்குக் கேடு செய்தும், கற்க வேண்டியதைக் கல்லாமலும், பூமிக்குப்

பாரமாக வாழ்கின்ற பொல்லாதவர் வீட்டிலே சென்று நிலேபெற்று வாழ்வாயாக!' என்று விடை கொடுத்தேன்.'' இனிச் செய்யுட்களேப் பார்ப்போம்.

''பாடலிலே தேர்ச்சியுற்றுக் கீர்த்திபெற்ற
பாவலவர் பலராய் மன்னும்
கூடலிலே கூடி, நிற்குப் பணிபுரிந்து,
மனம் உவந்து, குலவி நாளும்
வாடலிலே மிகமெலிந்த எனதுதந்தை
தாயினது வறுமை நோக்கி,
நீடலிலே 'நீபோய்வா' என்றுதனம்
ஈந்துஅனுப்ப நேர்ந்து சென்றேன்.

''சென்றுமறு நாள்பரிதி குணக்குஎழுந்த
அமையம்அதில் செம்பூர் சேர்ந்தே
துன்றுமிகக் குன்றவளர் புயத்துஅழகா!—
நினதுஅடியேன் குடிசை நோக்கி,
என்றும்அடை யாதபெருங் களிப்புஎய்தி,
உட்புகுந்தேன் எக்காலத்தும்
நன்றுசெயா துஇருந்துமனம் வருந்தமிடி
புரிந்தசனி நலிந்து சென்முன்.

''அகத்தைவிட்டு வெளியில்அதி விரைவில் சென்ற
அவனேமறித்து 'அப்பா! நீ அழுகையோடு அம்-
பகத்தைமிகக் கசக்கிஅல்ல லுடனே செல்லும்
பான்மையைநீ பகர்தி,எனப்' பண்போடுஈகற்—
பகத்தைவென்ற கரத்தன்;அருள் மனத்தன்;என்றும்
பாவல்லோர்க்கு இதத்தன்; நிறை பணத்தோனும்சண்
முகத்தைஉனக்கு ஆதாரம் ஆகக் கொண்டாய்!
மொய்ம்பாய் யான் இனிஇருக்க முடியாது'என்முன்.

''நெடுங்காலம் மனேவதிந்து சலமே செய்த
நீதியற்ற முடவா! நீ நிலேயாது ஓடப்
படும்காலம் அடுத்ததனுல் இனிமேல் இந்தப்
பக்கமதில் மறந்தும்பார்க் காதே!' என்று ஓ—
திடும்காலம் அவன்வருந்தி, 'இரப்போர்க்குஅள்ளி
இறைக்கின்ற சண்முகமால் இசைதானே தங்—
கிடும் தாலமிசை யான்போய் இருப்பதெங்கே?
இரங்கி, எனக்கு இருக்கும் இடம்இசைப்பாய்!' என்ன.

"நில்லாமை எனப் பனுவல் உரைக்கக் கேட்டும்,
நெடுங்காலம் பொருள்தமக்கே நிலைஎன்று எண்ணி,
இல்லாமை மேற்கொண்டார்க்கு ஏதும் ஈயாது,
இழந்துமனம் உழன்று நல்லோர்க்கு இடும்புசெய்து,
கல்லாமை நீண்டுபல்லோர் சீசீ என்னக்
காசினிக்குஓர் சுமையாகக் கலந்து தங்கும்
பொல்லாமை மனத்தர் அகம் புகுந்துஎந் நாளும்
போகாது அங்கு இருந்து அரசு புரிவாய்'என்றேன்."

வள்ளல் கொடுத்தனுப்பிய பணத்தைக் கொண்டு நெல் வாங்கி வீடு நிறைய வைத்துக் கொண்டாராம். இதையும் அவரே சொல்லட்டும்.

"சொல்ஓங்கி ஒலிக்கின்ற முறையூர் வாழும்
துரையே! நீ கொடுத்தபொருள் தனக்குத் தூய
நெல் வாங்கி வீடுகொள்ள நிறைத்தேன் அன்றே
நெடியபசிப் பிணியும்விட்டு நீங்கிற்றுஅம்மா!"

## முதுகுளத்தூர் ஆறுமுகம் பிள்ளை

வித்துவான் பூலாறுசாமி பிள்ளையின் புதல்வர் ஆறுமுகம் பிள்ளை. சரவணப் பெருமாள் கவிராயரிடம் கல்வி கற்றவர். விரைவாகவும் வேடிக்கையாகவும் கவிகள் பாடுவார். வியாதியால் வருந்திக் கிடக்கும் காலத்தினும் பாட்டுப் பாடியே ஆறுதல் பெறுவது இவர் இயல்பு. தாம் நோயுற்றிருந்த போது வள்ளல் சண்முகனுருக்குச் சில சீட்டுக் கவிகள் வரைந்துள்ளார்.

"கண்முகம்போல் பாவாணர் களைநோக்கும்
கருணைமலர்க் கற்ப கக்கைச்
சண்முகவேள் இடத்துஅடைந்துஎன் சஞ்சலமும்
படுக்கையிலே சார்ந்த வாறும்
பண்முகமாய் அவன்சமுக நற்சமயம்
பார்த்துரைத்துப் பரிசு பெற்று
வண்முகமாய் உத்தரவு வாங்கிஎன்பால்
சீக்கிரத்தில் வருதி மானே"

மற்றொரு முறை மணியார்டர் மூலம் பணம் அனுப்பும்படி ஒரு கடிதம் எழுதினார். அதில் ஒரு பாடல்:

"சேய்க்குணாட்டிப்பசியைத்தீர்த்து, அழுகைமாற்றுவது
தாய்க்குணம்அன்றோ?முறைசைச் சண்முக!என்நோய்க்கு
மருந்துஅருந்த வேண்டி மணிஆர்டர் கேட்டேன்
தரும்தருமா தேட ஒண்ணு தா?"

ஒரு சமயம் இவர் வீடு தீப்பிடித்து எரிந்து விட்டது. அதை மீண்டும் கட்டுவதற்குப் பணம் அனுப்பும்படி கீழ்க்கண்ட கவிதைகளை எழுதினார்.

"மதிக்குடையான் தனைவெருட்டும் வனப்புடையாய்!
உலகம்எலாம் மதிக்க ஓங்கும்
நிதிக்குஉடையான் தனைநிகர்க்கும் நிலைஉடையாய்!
தனைஅடுத்த நேயர் துன்பத்
ததிக்கு உடை, ஆபரணம் முதல் தரும்'முறையூர்'
என்றுஅறமே தழைக்கும் தெய்வப்
பதிக்குஉடையாய்! சண்முக! நின் திருச்சமுகத்து
என்குறையைப் பகரக் கேண்மோ!

"இந்தமதி ஈரைந்தாந் தேதி அந்தோ!
என்வீட்டில் தீப்பிடித்தே இடைவிடாமல்
வெந்ததனால் சாமான்கள் எல்லாம் வெந்து,
வேட்டிவெந்து சேலைவெந்து வெறும் வீடாகிச்,
சந்தியிலே விட்டுவிடத் தேம்பித் தேம்பித்
தாரம்அழ மக்கள்அழச், சார்ந்தோர் ஏங்க,
வந்திடும்இத் துயர்சகிக்க முடியாது ஆகி
வள்ளால்! நின் இடத்தில்இதை வழுத்தி னேனே

"தீப்பிடித்த என்குடிலைச் செத்தையினால் மூடுதற்கு
மாப்பிடித்த மார்பா! வழியும்இலை ஏய்ப்பும்இலை
எந்தமட்டிற் சித்தம் இரங்குமோ நாயேனுக்கு
அந்த மட்டும் போதும் அருள்.

"சேயும்மனை யும்நானும் சேர்ந்துஅழத் தீப்பிடித்துப்
பாயும் துணிமணியும் பாழ்ஆக்க, நோயும்
தணியாது நெஞ்சம் தளர்வேற்த ஏதேனும்
மணிஆர்டர் செய்துஅனுப்புவாய்."

## உ. வே. சாமிநாதையர்

திரு ஐயர் அவர்கள் மு. ரா. கந்தசாமிக் கவிராயருடைய குமணசரித்திரத்துக்கு அளித்துள்ள சாற்றுக் கவியில் வள்ளல் சண்முகனாரைப் பாராட்டியுள்ளார்.

"நறையூரும் புகழ்க்குமணன் சரிதையைச்செந்
தமிழ்யாப்பால் நவிற்றி இந்தத்
தறையூரும் புகழ்ப்பாண்டித் துரைமதுரைத்
தமிழ்ச்சங்கம் சார்ந்து சாற்றி
முறையூர்ச்சண் முகவணிகர் திலகனுக்குஅம்
முறைஉரித்து ஆம் முறைசெய் தானல்
துறையூர்செந் தமிழ்க்கவிஞன் கந்தசாமிப
பெயர்கொள் தோன்றல் மன்னே"

என்பது ஐயர் வாக்கு.

## ரா. ராகவையங்கார்

பாண்டிய நாட்டுத் தென்னவராயன் புதுக்கோட்டையில் பிறந்தவர். இராமானுச ஐயங்காருடைய புதல்வர். பாஸ்கரசேதுபதியவர்களின் சமூக வித்துவான். மதுரைத் தமிழ்ச் சங்கச் செந்தமிழ்ப் பத்திரிகைக்கு ஆசிரியராக இருந்தவர். சிறந்த ஆராய்ச்சியாளர். வள்ளல் முயற்சியால் வெளியிடப் பெற்ற தனிச்செய்யுட் சிந்தாமணிக்கு விரிவான ஆராய்ச்சி முன்னுரை வழங்கியுள்ளார். அதில். "வைசிய குலமணியும், செவிச்செல்வம் செல்வத்துட் செல்வம்' என்னும் திருமொழியின் உண்மையை அறிந்து புலவர்களை ஆதரித்து வரும் சீமானும் அருங்குணம் எல்லாம் ஒருங்குடையோரும் முறையூர் அதிபதியுமாகிய ஸ்ரீமான் பழ. சி. சண்முகம் செட்டியார்" என்று பாராட்டியுள்ளார்.

மேலும் ஒரு பாடலில்,

ஒருபோதும் மறவாது துதிஓது
சண்முகப்பேர் உரவோன்; காவி
இருபோது நிகர்விழியார் மடல்எழுதும்
உருவமதன்; இயற்பா வல்லோர்
வருபோது நல்மொழியால் அவர்அவர்க்கு
வேண்டுவன வழங்கி, ஐந்து
தருபோதும் ஆவினுக்கும் உவமைஎன
மேவுபுகழ் தழைத்து வாழ்க!

என்று பாராட்டியுள்ளார்.

## வேம்பத்தூர்ப் பிச்சு பாரதிகள்

பிச்சு பாரதிகள் மதுரையை யடுத்த வேம்பத்தூர்ப் புலவர்கள் பரம்பரையில் வந்தவர். சோழிய அந்தணர். சிலேடை பாடுவதில் சிறந்தவர். ஆசுகவி. சிலேடைப் புலி என்று அழைக்கப் பெற்றவர். இராமநாதபுரம் பாஸ்கர சேதுபதி அவர்களால் பாராட்டப் பெற்றவர். சொற்பொழி வாற்றுவதில் வல்லவர். வள்ளல் சண்முகனாரால் ஆதரிக்கப்பட்டவர்.

"வில்வம் எடுக்கும்கை; வேண்டியபொன் ஈயும்கை;
செல்வத் திருப்பணியே செய்யும்கை; நெல்வளரும்
மாவளம்சேர் தென்முறைசை மன்னும் வணிகக்குலக்
காவலனும் சண்முகன்செங் கை"

என்று வள்ளலுடைய கொடைக் கரத்தையும்,

"சிந்தைக்கு இசைந்தபடி செந்தமிழ்க்கு ஈகின்றபடி;
வந்தவருக்கு அன்னம் வழங்குபடி; சந்ததமும்
சீர்த்தி முறைசை செயசண் முகவணிகப்
பார்த்திபன்தன் வாயிற் படி"

என்று வாயிற்படியையும் பாராட்டியுள்ளார்.

இவர் ஒரு சமயம் வெட்டைப் பிடிப்பினால் மிகவும் வருந்தினார். வள்ளல் அவர்கள் தகுந்த

மருத்துவரைக் கொண்டு, பெரும்பொருட் செலவு செய்து அப்பிணியைத் தீர்த்தார்கள். வள்ளல் செய்த உதவியை,

"விட்டுக் கொடிச்சாற்றை வேண்டும் முறைசைதனில்
கட்டுக்கொடிச்சாற்றைக் கங்கையில்இட்டு,
உட்டிணமாம்
வெட்டைப் பிடிப்பை விடுவித்தான்—சின்னயன்சேய்;
கட்டழகன்; சண்முகயோகன்.

என்று வெண்பாவால் பாராட்டியுள்ளார். மேலும் பல பாடல்களால் வள்ளலைப் பாராட்டியுள்ளார்.

## அரசஞ் சண்முகனார்

அரசஞ் சண்முகனார் மதுரையைச் சேர்ந்த சோழவந்தானில் வேளாளர் குலத்தில் பிறந்தவர். தந்தையார் அரசப்ப பிள்ளை. இலக்கண இலக்கிய ஆராய்ச்சியில் சிறந்தவர். மதுரை சேதுபதி உயர் நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக இருந்தவர். மதுரைச் தமிழ்ச்சங்கத்து செந்தமிழ்க் கல்லூரியிலும் ஆசிரியராக விளங்கினார்.

ஏகபாத நூற்றந்தாதி, மாலை மாற்று மாலை முதலிய அதிசயமான நூல்களும், இன்னிசை இருநூறு என்னும் நீதி நூலும், வேறு பல நூல் களும் இயற்றியுள்ளார்.

வள்ளல் சண்முகனாரிடம் அன்பு கொண்டு வாழ்ந்தவர்; அவரிடம் பேருதவி பெற்றவர்.

## தெய்வசிகாமணி ஐயர்

பாரி வாழ்ந்த பறம்புமலையில் அந்தணர் குலத்தில் பிறந்தவர் தெய்வசிகாமணி ஐயர். திருவாவடுதுறையில் கல்வி பயின்று, சிவகெங்கையில் தமிழாசிரியராக வாழ்ந்தவர்.

இவர் தமது மகளுக்குத் திருமணம் முடித்த பிறகு, சீர்வரிசை கொண்டு சென்னைக்குப் புறப்படும் போது, சண்முகனுர் மீது சில பாடல்கள் பாடி உதவி பெற்றுச் சென்றுள்ளார்.

''சீர்பூத்த முறைசைநகர் செழித்துஎழிலால்
வளர்ந்துஓங்கச் செல்வத்து எங்கள்
பேர்பூத்த சண்முகமால் எனும்வணிக
குலேந்திரமன் பெரிதும் வாழ்க!
ஏர்பூத்த வளங்கள்எலாம் இனிதுஓங்க
எளியர்மனத்து இன்பம் நல்கும்
நார்பூத்த செல்வம்மிக நயந்துஓங்கத்
திருவருளும் நல்க மாதோ''

என்பது அவர் பாடிய பாடல்களில் முதற் பாடலாகும்.

## குன்றக்குடி அப்பாவு பிள்ளை

அப்பாவு பிள்ளை என்பவர் குன்றக்குடியில் பிறந்தவர்; தமிழில் பல நூல்களை ஆய்ந்தறிந்தவர்; சிலேடையாகப் பேசுவதில் வல்லவர்; சொற் பொழிவுக் கலையில் வல்லவர்; குன்றக்குடியிலுள்ள திருவண்ணுமலை ஆதீன வித்துவானுக இருந்தவர்; வள்ளலிடம் மிக்க ஈடுபாடுள்ளவர்.

''பாண்டியனுர் கூடலினில் பண்டுசொக்க லிங்கர்அன்பாய்
ஆண்டுஅதனில் நான்குறும்அவ் ஆடல்இன்றும்—
காண்டும்எனச்
சொக்கன்முறை தோன்றவந்தான் தொல்ராம சாமிஎனத்
தக்கபெயர் கொண்டுதன தன்.''

இது வள்ளலின் தந்தையார் மீது இவர் பாடிய பாடல்.

''முப்பால் உணர்ந்து, முறைநகர்வாழ் சண்முகவேள்
அப்பா! வா!' என்றுஎனையும் ஆதரித்தான்—மைப்புயல்வான்
கற்பகமா, கைம்மா, மணிநிதிமாக் கண்டவன்போல்
நற்புவியில் வாழ்வுபெற்றேன் நான்''

"திராப் பிராரத் துவம், சஞ் சிதம் அகற்றி,
வாராமல் ஆகா மியம் அறுத்துப், — பார்மிசை ஓர்
அன்னை எனத் தோன்றி அறிஞரையே ஆதரித்தான்
சின்னையன் தன் சண்முகப்பேர்ச் சேய்"

இவை வள்ளல் மீது இவர் பாடியவை.

## அட்டாவதானம் மீனாட்சிசுந்தரக் கவிராயர்

இவர் மதுரை ஜில்லா பேரையூர் வித்துவான் பொன்னு செட்டியார் புதல்வர். அட்டாவதானக் கலையில் சிறந்தவர். வள்ளல் சண்முகனார் திருமுன் அட்டாவதானம் செய்து பெரும் பரிசில் பெற்றுள்ளார்.

இவர் அட்டாவதானம் செய்யும்போது, முறையூர் வரத விநாயகர் மேல் பாடிய பாடல் ஒன்று:

"சவ்வியசாசி பெறவே பகழி தனை அளித்த
அவ் அரன் மைந்தன் முறையூர் அதனில் அமைந்துவளர்
செவ்வி திகழும் வரத விநாயகன் சேவடியைக்
கௌவை இலாது பணிவார்க்கு நன்மை கதித்திடுமே"

## வெள்ளகால் வெ. ப. சுப்பிரமணிய முதலியார்

முதுபெரும் புலவர் வெ. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்களுக்கு சண்முகனாரிடம் தொடர்பு உண்டு. குமண சரித்திரம் சாற்றுக் கவியில் வள்ளல் சண்முகனாரைப் பின் வருமாறு பாராட்டியுள்ளார்.

"கந்த சாமிமால் ஆதரம் கனிந்து அளித்திட்ட
சந்தம் மேவிய குமணவான் சரித்திரப் பாவை
உந்து பேரன்பி னெடுதனக்கு உரிமையாக் கொண்டான்
முந்துறா உம்புகழ் முறைசையூர் முதல்வன்சண் முகவேள்"

## பிற புலவர்கள்

மற்றும் அட்டாவதானம் முத்துவேங்கடாசலம் ஐயங்கார், மதுரை குப்புசாமி நாயுடு, வித்துவான் நா. ராமசாமி நாயுடு, மிதிலைப்பட்டி ராமசாமிக் கவிராயர், சாமாராயர், மீ. சுப்பையர் முதலான நூற்றுக்கணக்கானவர் வள்ளலைப் பாடி வரிசை பெற்றுள்ளனர்.

## பதிப்புப் பணி

குமண சரித்திரம், முறையூர் பிரபந்தத்திரட்டு, திருப்போரூர் வண்ணம், திருப்போரூர்த்திரிபதாதி, நாமகள் இரட்டை மணிமாலை, திருக்கோட்டாற்றுக் கலம்பகம், தனிச் செய்யுட் சிந்தாமணி முதலிய பல நூல்கள் வெளிவர உதவியுள்ளார் சண்முகனர்.

# 8. தொழில் முறை

சண்முகனுருடைய தந்தையார் கொழும்பு பழ. ராம. கடையில் மேலாளாக இருந்து கொடுக்கல் வாங்கல் தொழிலில் பெரும்பொருள் ஈட்டினர். பிறகு அக்கடையையே ஒப்புக்கொண்டு, சொந்த மாகத் தொழில் நடத்தி வந்தார். இலங்கையில் மட்டும் நாற்பது கிளைகளைக் கொண்டு ஆல் போலத் தழைத்து விளங்கியது பழ. ராம. கடை. இரங்கூனிலும் பழ. சி. என்றும், பழ. ராம. என்றும் இரு கடைகள் இருந்தன.

சென்னை பவழக்காரத் தெருவிலும் பழ. ராம. என்ற பெயரில் கடையொன்று பெருமளவில் கொடுக்கல்–வாங்கல் நடத்தி வந்தது.

அக்காலத்திலே ஓரிரு ஊர்களில் மட்டும் கடை நடத்துபவர்கள் முக்கியமான நகரங்களில் தெரிசனை உண்டியல்களுக்கு–கண்ட மாத்திரத்தில்–பணம் கொடுக்கவும், வசூலிக்கவுமாக அடத்திக் கடைகள்[1] ஏற்படுத்திக் கொள்வார்கள். அவ்வாறு சென்னை பழ. ராம. கடை ஒரு கடைக்கு அடத்தி பார்த்தால், அந்தக் குறிப்பிட்ட கடைக்கு தனிப் பட்ட பெருமையும், வசதிகளும் பெருகுமாம்.

மேலும் பதினைந்து ஆண்டுகள் நமது சண்முகனுர் சென்னையில் கெடியாக வாழ்ந்ததனுல், சென்னைத் தொழில் மிகவும் பிரபலமாக நடைபெற்றது என்று சொல்லலாம். அக்காலத்தில் சென்னையிலிருந்த நூற்றைம்பது கடைகளில் குறிப்பிடத்தக்க சிறப்பு வாய்ந்திருந்தது முறையூர் பழ. ராம. கடையாகும்.

கொழும்பு சென்னைக் கடைகள். பணத்தைக் கொட்டிக் கொடுத்தன. முறையூரும் சுற்றுக்

---

1 ஏஜன்ஸி

கிராமங்களும் நெல்லைச் சொரிந்தன. இவ்வாறு பெற்ற வருவாயை வாரி வாரி வரையாது வழங்கினார் வள்ளல்.

இவ்வாறு வழங்கிய வள்ளலுக்கு இறுதிக் காலத்தில், கடைகளைக் கட்டி. முட்டுப் பாட்டையும் ஏற்கநேர்ந்தது பண்டை விதியின் பயனேயன்றோ?

சோம்பாது தொழில் செய்த சண்முகனார் செல்வத்தை ஓம்பாது வாரி இறைத்ததனாலே வறுமையுற்றார் என்பது அறிவிலார் கூற்றேயாம். "போகிற பொருளைப் பிடித்து வைக்க முடியாது. அனைத்தும் போம்; அறமே நிற்கும்" என்பதை உணர்ந்தே வழங்கினார். ஈத்துவக்கும் இன்பத்தை அறிந்தவரன்றோ சண்முகனார்!

# 9. அறப்பணிகள்

## கோயில் திருப்பணி

முறையூர் மீனுட்சி சுந்தரேசுவரர் ஆலயத் திருப்பணி மேற்கொண்டிருக்கையிலேயே வள்ள லுடைய தந்தை இராமன் செட்டியார் இறைவனடி யெய்தினர். தந்தை மேற்கொண்ட பணி தடைப் படாமல், திட்டமிட்டதிலும் இரு மடங்கு செலவிட்டு, கலைநலம் விளங்க, மலையென நிமிர்ந்து நிற்கக் கட்டி முடித்தார் சண்முகனர்.

கோயில் திருப்பணி நடைபெற்று வருகையில், பொதுக் குடும்பத்தில் சில சிக்கல்கள் ஏற்பட்டன. அதனுல் மேற்படி திருப்பணி நிர்வாக வேலைகள் உள்ளூர் சேவு. அரு. குடும்பத்தாரிடம் ஒப்படைக் கப்பட்டது. தேவகோட்டை அறச் செல்வர்களான முத்து கரு. அரு., மேற்படியூர் பழ. செ. குடும்பத் தாரிடம் பணம் பொதுக்கட்டி வைக்கப்பட்டது. மேற்படி குடும்பத்தினரின் ஆலோசனைப்படி திருப்பணி பூர்த்தி செய்யப்பட்டு நல்லதொரு நாளில் குடமுழுக்கு விழா வெகு சிறப்புடன் சண்முகனர் முன்னிலையில் நடைபெற்றது. மேற்படி திருப்பணிக் காக மூன்று நான்கு இலட்சங்களுக்கு மேல் செலவாயின.

## மண்டகப்படிகள்

கோவிலில் முறைப்படி பூசை, நைவேத்தியங்கள் நடைபெற ஏற்பாடுகள் செய்தார் சண்முகனர். ஆனித்திருநாளில் எட்டாந்திருநாள், திருக் கல்யாணம், தீர்த்தவாரி மண்டகப் படிகளை ஏற்றுக் கொண்டு ஒவ்வொரு ஆண்டிலும் மேலும் மேலும் சிறப்பாக அமையும்படி நடத்தி வந்தார். ஆண்டு தோறும் மீனுட்சி சுந்தரேசுவரர் இரதோற்சவத்தை

விமரிசையாகநடத்தி வந்தார். இந்த இரதோற்சவச் சிறப்பைக் கீழ்க்கண்ட கருப்பையாப் பாவலர் பாடலால் அறியலாம்.

"சீர்ஏறி உயர்முறையூர் சிவபெருமான்
உமையோடு சிறந்த சீர்த்தித்
தேர்ஏறித் திருவீதிப் பவனிவரக்
கண்டுதரி சிக்கச் செய்தான்
வார்ஏறி அழகுபொலி மலைஏறி
வளர்மானூர் மதியில் ஏறித்
தார்ஏறி ஓங்குபுயத் தடமேருச்
சண்முகசீ தரபூ மானே"

சண்முகனார் தம்பி கருப்பன் செட்டியார் இந்த மண்டகப்படி காரியங்களை மேற்பார்த்து வந்தார். அதைச் சிறப்பித்து கருப்பையாப் பாவலர் வியந்து பாடியுள்ளார் :—

"மன்னர் புகழும் மதுரைநகர்
மலையத் துவச வழுதிமிகு
வளமார் முறைசை மாநகரில்
வணிகர் குலத்தில் வந்துஉதித்தே
அன்ன நடைஅங் கயற்கண்ணி
அமுத மொழிப்பெண் அரசியினை
அரிமா மறையோன் அறிவரிய
அரனும் சோம சுந்தரர்பால்
பன்னற்கு அரிய மணம் முடித்துப்
பார்த்து ஆங்கு இனிதுபரிவுகொடு
பார்த்தன் இராம பூபாலன்
பாலன் கருப்ப வணிகேந்த்ரன்
மன்னும் கருணைச் சொக்கேசர்
மகிமைத் திருக்கல் யாணம்மன
மகிழமுடித்தான் இதுகண்டோர்
வரத்தை எவரும் வழுத்தஅரிதே"

## பிறபணிகள்

மதுரையைச் சேர்ந்த மேலூரில் விக்டோரியா பேரரசி மணி விழா மண்டபம் கட்டுவதற்கும், மதுரை அரசினர் மருத்துவ மனையில் பிரசவ வார்டு கட்டுவதற்கும் பெரும்பொருள் நல்கினார் சண்முகனார்.

# 10. சென்னை வாசம்

1901-ஆம் ஆண்டு தமிழ்நாட்டின் வரலாற்றிலே மிகச் சிறந்த ஆண்டாகும். பாண்டித்துரைத் தேவர் மதுரையிலே தமிழ்ச் சங்கம் அமைத்ததும், கல்கத்தாவில் கீழ்த்திசை நூல் நிலையத்தில் தமிழ்ப் பிரிவு ஏற்பட்டதும் அவ் ஆண்டேயாகும்.

நமது சண்முகனாரின் இரண்டாவது திருமணமும் அவ் ஆண்டில் தான் நடைபெற்றது. சண்முகனார் சென்னை வாசத்தை மேற்கொண்டதும் அவ் ஆண்டே.

## மயிலை

சென்னையிலே மயிலாப்பூர் சிறந்ததொரு பகுதி. வான்புகழ் வள்ளுவர் வாழ்ந்ததையொட்டி நாயனார் கோவில் என்னும் ஆலயம் அமைந்துள்ள இடம். திருஞானசம்பந்தப் பெருமானின் பாடல் பெற்ற திருப்பதி. எலும்பைப் பெண்ணாக்கிய அற்புதம் நிகழ்ந்த கபாலீச்சுரம் திகழப்பெற்ற தலைநகரம் மயிலை.

மயிலாப்பூரிலே கென்னடி தெரு[1] என்று வழங்குகின்ற தெருவிலே பெரிய காம்பவுண்டுக்குள் அமைந்த பங்களாவில் வாழ்ந்து வந்தார் சண்முகனார்.

## பெருமித வாழ்க்கை

சிற்றூரான முறையூரிலேயே குபேர வாழ்வு வாழ்ந்தவர் சென்னையில் எப்படி வாழ்ந்திருப்பார் என்பதைச் சொல்லவா வேண்டும்? அக்காலத்தில் சென்னையில் சிறப்புற வாழ்ந்திருந்த பல பெரியார்களுடனும் சண்முகனார் நேசங்கொண்டு

---

1 கன்னடியர் தெரு என்பதே கென்னடி தெரு என மருவி வழங்கலாயிற்று.

இருந்தார். பல கிளப்புகளிலும் சங்கீத சபைகளிலும் இலக்கிய மன்றங்களிலும் அங்கத்தினராக இருந்து ஆதரித்து வந்தார்.

சண்முகனரிடம் இரட்டைக் குதிரைச் சாரட்டு வண்டிகள் இருந்தன. குதிரைச் சாரட்டு வைத்திருப்பது அக்காலத்தில் மிகமிக அபூர்வம். அக்காலத்தில் சிறந்த மோட்டார் வண்டி வைத்திருப்பதற்கு இது சமானமாகும். ஆங்கில அரசாங்க மதிப்பும், சுதேச அரசர்களின் நட்பும் இவருக்குக் கிடைத்திருந்தன.

நாள்தோறும் சண்முகனர் இரட்டைக் குதிரைச் சாரட்டில் ஏறி இரண்டு ஜவான்கள் பின் நிற்க தானே அதை ஓட்டிக் கொண்டு சென்னைக் கடற்கரைக்குப் பவனி செல்வது மிடுக்காகவும் கண்கொள்ளாக் காட்சியாகவு மிருக்கும்.

## ஆன்றோர் நட்பு

சென்னையில் ஸ்ரீனிவாச ஐயங்கார்,[1] கே. பாஷ்யம் ஐயங்கார்[2] போன்ற ஆன்றோர்களின் நட்பு சண்முகனருக்குக் கிடைத்தது.

காயனபடு கீர்த்தனபடு சரஸ்வதிபாய் எனும் பிரபல கதாகாலக்ஷேப வித்வாம்ஸினி தனது முதலாவது கதா காலட்சேபத்தை சண்முகனர் முன்னிலையில் அரங்கேற்றி ஆசிபெற்றது குறிப்பிடத்தக்கதாகும்.

## டில்லி முடிசூட்டு விழா

1911-ஆம் ஆண்டு டிசம்பரில் டில்லியில் நடைபெற்ற ஐந்தாம் ஜார்ஜ் சக்கரவர்த்தியின் முடிசூட்டு

---

1 இவர் சிறந்த வக்கீலாக இருந்து காங்கிரஸ் மகா சபைத் தலைவராகப் பின்னாளில் விளங்கினர்.

2 சிறந்த வக்கீலாவார்.

விழாவுக்கு அழைப்புப் பெற்றார் சண்முகனார். இவருடைய கெழுதகை நண்பராகிய வயிநாகரம் இராமநாதன் செட்டியாருக்கும் அழைப்புக் கிடைத்தது. டில்லி முடிசூட்டு விழாவில் இடம் பெற்றவர்களை மிகப் புகழ் படைத்தவர்களென்று கருதும் காலம் அது.

இருவரும் டில்லி முடிசூட்டு விழாவிலே பதக்கங்கள் பரிசாகப் பெற்றனர். திரும்பும் வழியில் காசி, பிரயாகை, கயை, பண்டரிபுரம், பத்ராசலம், கல்கத்தா முதலிய புண்ணிய தலங்களைத் தரிசித்து தான தருமங்களை வழங்கி தமது ஊர் போந்தனர்.

## சென்ற இடம் எல்லாம் சிறப்பு

சென்னை பவழக்காரத் தெருவிலே பழ. ராம. என்ற விலாசத்துடன் மிகவும் செல்வாக்குடன் இவருடைய கடை நடந்து வந்தது அல்லவா? இவர் கடைக்குச் செல்வது அபூர்வம். கணக்கரும், வாடிக்கையாளரும் இவர் பங்களா தேடி வந்து தகவல் பெற்றுச் செல்வர். சென்னையிலே எந்த விழா விசேடம் என்றாலும் அழைப்பு வரும். சென்னைப் பிரமுகர்களில் சண்முகனாரும் ஒருவராகத் திகழ்ந்தார்.

## மதுரை நேசம்

நமது வள்ளலாரின் சென்னை வாசம் 1915ம் ஆண்டு மதுரை வாசமாக மாறியது. சென்னையை விட்டு மதுரைக்கு வந்ததற்குரிய பலகாரணங்களில், பாண்டித் துரைத் தேவரின் நட்பும், தமிழ்ச் சங்கத் தொடர்புமே முக்கியமானவை.

## பக்தி வளர்த்தார்

மதுரை வடக்குச் சித்திரை வீதியில் நகரத்தார் விடுதிக்குச் சமீபத்தில் சண்முகனார் குடியிருந்தார். 1921ஆம் ஆண்டுவரை மதுரையில் வாழ்ந்தார்.

முறையூரிலே கறவைகளையும் பறவைகளையும் தோப்புகளையும் துரவுகளையும் வளர்த்தார். சென்னையிலே செல்வத்தையும் செல்வாக்கையும் வளர்த்தார். மதுரையிலே நல்லுணர்வையும், பக்தியையும் வளர்த்து மனத்தைப் பண்படுத்தினார்.

நாடோறும் மீனாட்சியம்மனைத் தரிசித்து, சொக்கலிங்கக் கடவுளை வந்தித்து வருவார். அப்போது இவர்

"கல்லாப் பிழையும் கருதாப்பிழையும் கசிந்துஉருகி
நில்லாப் பிழையும் நினையாப் பிழையும் நின் அஞ்சு எழுத்தைச்
சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப் பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்கச்சி ஏகம்பனே"

என்று மனத்துட்பாடி உருகுவார்.

## 11. தனிச்செய்யுட் சிந்தாமணி

மதுரைத் தமிழ்ச் சங்கத்தொடர்பினுல் சண்முகனுரால், தனிச்செய்யுட் சிந்தாமணி என்ற விலை மதிப்பற்ற பொக்கிஷம் தமிழுக்குக் கிட்டியது.

"எல்லாப் பொருளும் இதன்பால் உள; இதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லையால்"

என்பது திருக்குறளைப் பற்றி மதுரைத் தமிழ் நாகனுர் கணிப்பு. இது தனிச்செய்யுட் சிந்தாமணிக்கும் முற்றிலும் பொருந்தும்.

"இருந்தமிழே! உன்னுல் இருந்தேன். இமையோர்
விருந்து அமிழ்தம் என்னினும் யான்வேண்டேன்"

என்ருர் தமிழ்ச்சுவையில் திளைத்த ஒருவர்.

"இம்பர் நாட்டின் செல்வம் எலாம்
எய்தி அரசாண்டு இருந்தாலும்
....................கவிதையிற்போல்
கற்ருேர்க்கு இதயம் களியாதே"

என்கின்ருர் இன்னெரு புலவர். தமிழ் என்ற சொல்லுக்கே இனிமை என்ற பொருள் உண்டு. இவ்வாறு இன்பமும் இனிமையும் பயக்கும் ஆற்றலைத் தமிழுக்கு, தமிழ் நிலத்தில் தோன்றிய பலபெரும் புலவர்களே வழங்கியுள்ளனர். தமிழ்க் காவியங்கள் அளவிறந்தன: தனிச்சிறப்பும் உடையன. காவியங்களே அன்றி, புலவர்கள் அவ்வப்போது பாடிய பாடல்களோ எண்ணிலடங்கா; ஏடிடம் கொள்ளா.

தமிழ்ப் புலவர்கள் தத்தம் வாழ்க்கையில் எதிர்ப்பட்ட பலவித் சந்தர்ப்பங்களில் வாழ்த்தியும் வைதும், நகையரும்பியும், அழுது வெம்பியும், துறவிலே துணிந்தும், காதலிலே கனிந்தும், செல்வத்தில் திளைத்தும், நல்குரவில் நலிந்தும்

பாடிய பாடல்கள் பல்லாயிரமாகலாம். இப்பாடல்கள் பிற காவியங்களைப்போன்று எண்ணி, இருந்து எழுதப் பெற்றன அல்ல. ஆசு கவிகளாக அரும்பிப் பூத்தன; உணர்ச்சிப் பெருக்கினுல் உள்ளிருந்து எழுந்தன. உள்ளத்திலே பதித்து பிறகு ஏட்டிலே எழுதினுர் ஆதல் வேண்டும். காவியங்கள் போல இவை ஒரு சேரக் கிடைக்கமாட்டா! படித்தவர் நினைவிலே, பாமரர் வாயிலே, பண்டிதர் வீட்டிலே, பழம்பனை ஏட்டிலே அங்கொன்றும் இங்கொன்று மாகச் சிதறிக்கிடப்பன. பாடினவரும் ஒரு காலத்த வரோ, ஒரு நாட்டவரோ, ஓரினத்தவரோ, ஒரு மதத்தினரோ, அல்லர். முடிசூடிய மன்னரும், முழுநீறு பூசிய முனிவரும், இரவலரும், புரவலரும், மறைபடிக்கும் மறையவரும், பறையடிக்கும் பறையரும், ஆடவரும், ஆயிழையரும், சைவரும், வைணவரும், முகமதியரும், கிறித்தவரும், ஆசிரியரும் மாணவரும், ஐரோப்பியரும் இப்படிப் பல திறத்தவரும் பாடிய பாடல்கள் அவை.

இப்பாடல்களை ஒன்று சேர்ப்பது எளிதான செயலன்று. பொறுமையும் உறுதியும் அறிவும், பொருளும் ஒருங்கே அமைதல் வேண்டும். இவற்றை ஒன்று சேர்ப்பது எவ்வளவு கடினம் என்பதற்கு ஒரு சிறு உதாரணம் இங்கே எடுத்துக் காட்டலாம்.

## பாட்டுக்குப் பட்டபாடு

சென்னையில் இருந்த சந்திரசேகர கவிராஜ பண்டிதர் என்பார் பல்லாண்டுகட்கு முன்பு "தனிப் பாடல் திரட்டு" என்ற ஒரு நூலை வெளியிட்டார். அதிலுள்ள பாடல்களைத் திரட்ட அவர் பட்டபாடு சிறிதன்று.

ஒரு நாள் ஒரு பிச்சைக்காரன் தெரு வழியே பாடிக் கொண்டுபோனுன்.

"ஊரைச்சுடுமோ?"
என்று தொடங்கிய அவன் மீண்டும் மீண்டும் அதையே சொல்லிக் கொண்டு சென்ருன். நெடு நேரத்திற்குப் பிறகு அவன்,

"ஊரைச்சுடுமோ? உலகந்தனைச்சுடுமோ?"
என்று மேலும் இரு சீர்களைப்பாடி. அத்தெருவைக் கடக்கலானுன். அது ஒரு சிறந்த பாடலின் தொடக்கமென்றும், அப்பாடல் ஒரு வெண்பாவாக இருக்கலாமென்று பண்டிதர் எண்ணினுர்.

"மற்றைய அடிகளும் அவன் வாயிலிருந்து வெளிவந்து விடாவா?" என்று ஏங்கியவராய் அவனைப் பின் தொடர்ந்தார் பண்டிதர்.

அவனே அவ்வடி யொன்றையே திரும்பத் திரும்பப் பாடினுன். மற்றைய அடிகள் மறந்து விட்டன போலும்! பொறுமையிழந்த பண்டிதர், அவனிடம், "அப்பா! அப்பாடல் முழுவதும் பாடு. உனக்குப் பணம் தருகிறேன்" என்ருர். அவனும் ஒருவாறு ஞாபகப்படுத்தி,

"ஊரைச் சுடுமோ? உலகந் தனைச்சுடுமோ?
யாரைச் சுடுமோ? அறியேனே!"

என்று இரண்டடிகளை மட்டும் பாடிவிட்டு, மேலும் ஞாபகம் வந்தால் மற்ருெருநாள் பாடுவதாகக் கூறிச் சென்ருன்.

அப்பால் இரண்டு-மூன்று நாட்கள் அப்பிச்சைக் காரனுக்கு அப்பாடலின் பின்பகுதி ஞாபகத்துக்கு வரவேயில்லை. பண்டிதரும் எப்போதாவது, எப்படி யாவது அவன் வாயிலிருந்து அப்பாடலின் மறுபாதி யும் வந்துவிடலாம் என்று அவன் வரும்போது கவனிக்கத் தவறவில்லை.

நான்காவது நாள் ஞானோதயம் ஏற்பட்டது போல், அப்பிச்சைக்காரனுக்கு முழுப் பாட்டும் ஞாபகம் வந்துவிட்டது.

''ஊரைச் சுடுமோ? உலகம் தனைச்சுடுமோ?
யாரைச் சுடுமோ? அறியேனே! நேரே
பொருப்புவட்ட மானமுலைப் பூங்கொடியீர்! இந்த
நெருப்புவட்ட மான நிலா.''

என்று பாடி முடித்தான்.

பண்டிதர் 'பழந்தனம் இழந்தன படைத்தவரை ஒத்தார்'. பணம் வாரி வழங்கினார்.

ஒரு பாடலுக்கே இவ்வளவு முயற்சி தேவையானால் ஆயிரக் கணக்கான அரும்பெரும் பாடல்களைத் திரட்டித் தர எவ்வளவு முயற்சி வேண்டும்? எத்தனை பொருள் செலவாகும்? எத்தனை அறிஞருடைய ஒத்துழைப்பு வேண்டும்? இப்பணி தமிழுக்குச் செய்த சிறந்த பணி என்பதை யாரும் மறுக்க இயலுமோ?

## தனிச் செய்யுள் சிந்தாமணியின் பெருமை

இதுவரை வெளிவந்த "தனிப்பாடல் திரட்டுக்" களில் காணப் பெறாத பல சுவைமிக்க பாடல்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. இந்நூல் படிப் பார்க்குப் படிக்குந்தோறும் இன்பம் பயக்கும் அமுத சுரபி; இளங்கவிஞர்க்கு, தமிழ்ச் சொற்களைக் கையாளக் கற்பிக்கும் கையேடு, இலக்கியப் பேச் சாளருக்கு கருத்துக் கருவூலம். இந்நூலில்,

"கற்றதுகைம் மண்அளவு; கல்லா(த)து உலகளவு என்று
உற்ற கலை மடந்தை ஓதுகின்றாள். மெத்த
வெறும்பந் தயம்கூற வேண்டா. புலவீர்!
எறும்பும்தன் கையால்எண் சாண்!''

என்பதுபோன்ற செம்பாகமான நீதிகளும்,

" மன்னவனும் நீயோ? வளநாடும் உன்னதோ?
உன்னை அறிந்தோ தமிழை ஓதினேன்? "

என்பது போன்ற கவிஞனின் பெருமிதப் பேச்சுக்களும்,

" வால் எங்கே? நீண்ட வயிறு எங்கே? முன் இரண்டு
கால் எங்கே? உட்குழிந்த கண் எங்கே? சாலப்
புலிராயர் போற்றும் புலவீர்காள்! நீங்கள்
கவிராயர் என்று இருந்தக் கால் "

என்பது போன்ற இகழ்விலே தோன்றிய நகைச்சுவையும்,

" தீது உற்ற செல்வம் என், தேடிப் புதைத்த திரவியம் என்,
காது அற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே "

என்பது போன்ற வைராக்கியத் துறவு நிலையும்,

" மறந்தாகிலும் அரைக் காசும் கொடாமடமாந்தர்மண்மேல்
இறந்து ஆவது என்ன? இருந்து ஆவதென்ன?
இறந்து விண்போய்ச்
சிறந்து ஆளும் காயல் துரை சீதக்காதி திரும்பி வந்து
பிறந்தால் ஒழியப் புலவோர் தமக்குப் பிழைப்பில்லையே "

என்பது போன்ற கையறு நிலையும்,

" கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான்
குடிக்கத்தான் கற்பித்தானா?
இல்லைத்தான் பொன்னைத்தான் எனக்குத்தான்
கொடுத்துத்தான் இரட்சித் தானா?
அல்லைத்தான் சொல்லித்தான் ஆரைத்தான்
நோவத்தான் ஐயோ! எங்கும்
பல்லைத்தான் திறக்கத்தான் பதுமத்தான்
புவியில்தான் படைத் திட்டானே "

" சென்னபுரி வந்து சிவன் ஆயினேன்—நல்ல
அன்னம் அறியாதவன் ஆகி மன்னு சிரங்
கைக் கொண்டு, அரைச்சோமன் கட்டிச், சடைமுத்து
மெய்க்கொண்ட நீறு அணிந்துமே. "

என்பன போன்ற வறுமையில் பூத்த இதயப் பொருமல்களும்,

'' அரவம் கரந்ததோ ? அச்சுமரம் இற்றுப்
புரவி கயிறுஉருவிப் போச்சோ ? இரவிதான்
செத்தானே ? இல்லையோ ? தீவினையோ? பாங்கி !எனக்கு
எத்தால் விடியும் இரா ?''

என்பது போன்ற பிரிவுத் துயர்களும்,

'' உன் உயிரும், என்உயிரும் ஒன்று என்பது இன்று அறிந்தேன்.
மன்னு புகழ் வச்சத்தார் மன்னவா! உன்னுடைய
பொன்ஆகத்து எங்கையர்தம் போகநகச் சின்னங்கள்
என் ஆகத்தேஎரிகை யால் ''

என்பது போன்ற ஊடற் காட்சிகளும்,

இப்படி எத்தனை எத்தனையோ சுவைக்குந் தோறும் சுவை பயக்கும் பாடல்கள் தனிச் செய்யுள் சிந்தா மணியில் உண்டு.

# 12. முதுமையும் முழுமையும்

சண்முகனார் ஐம்பத்தைந்து ஆண்டுகளே வாழ்ந்தார். ஆனால், நூறாண்டு வாழ்ந்தவரும் செய்யமுடியாத பல நற்பணிகளைச் செய்து முடித்துள்ளார். இருபத்துமூன்றாம் வயதிலே தந்தை இராமன் செட்டியார் இறந்தார். அடுத்த ஆண்டிலேயே தமையன் சுப்பிரமணியமும் இறக்கவே இளவயதிலேயே குடும்பப் பொறுப்பு இவரைத் தேடியடைந்தது.

## கருப்பன் செட்டியார்

பெயரளவில் சண்முகனார் குடும்பத் தலைவர். ஆனால் தம்பி கருப்பன் செட்டியாரே நாட்டு தர்பார் முழுவதையும் ஏற்று நடத்தி வந்தார். தமது தமையனாருடைய கலை வாழ்வுக்கும், கொடை வாழ்வுக்கும் உறுதுணையாக இருந்தவர் கருப்பன் செட்டியார்.

குடும்பப் பொறுப்புக்களை ஏற்றிருந்த கருப்பன் செட்டியார் இறந்துபோனமையால், சண்முகனார் மதுரையை விட்டு முறையூர் வரநேர்ந்தது.

## அரளிப் பாறை :

முறையூருக்கு மூன்று கல் தொலைவில் அரளிப் பாறை இருக்கிறது. அப் பாறையின் உச்சியில் முருகன் ஆலயம் உண்டு. ஆனால் அந்த ஆலயத்தை விடப்பாறைக்குத்தான் பிரபலம் அதிகம். அப்பாறை செங்குத்தாக ஓங்கி உயர்ந்திருக்கவும் இல்லை; தட்டையாகவும் இல்லை. மக்கள் ஏறிச் செல்வதற்கு ஏற்ற விதமாக அமைந்துள்ளது. தெற்கு வடக்கில் சுமார் இரண்டாயிரம் அடி நீளமும், கிழக்கு மேற்கில்

சுமார் முந்நூறு அடி அகலமும், நூறு அடி உயரமும் உள்ளது. அதன் உச்சியானது யானையின் முதுகைப் போல இருபக்கமும் கரைவாக அமையப் பெற்றிருப்பதால், மழைநீர் தேங்காமல் வழிந்தோடி விடுகிறது. பாறை எப்பொழுதும் சுத்தமாகவும்,வெள்ளைவெளேரென்றும் காட்சி தருகிறது. இப்பாறைக்குக் கிழக்குப் புறம் பரந்த சமவெளி உண்டு. இந்தச் சமவெளி சுமார் ஆறு சதுரக்கல் பரப்புள்ளது. இச் சமவெளி முழுவதும் மானம் பார்த்த பூமியாதலால், மழைக்காலத்தில் மட்டும் புஞ்சை வேளாண்மை நடைபெறுவதுண்டு. கோடைகாலம் முழுவதும் தரிசாகக் கிடக்கும். அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சில பனைமரங்கள் தென்படும். இப் பாறையையும் இச் சமவெளியையும் சேர்த்துப் பார்க்கும் போது, ஒரு இயற்கை விளையாட்டரங்கைப் (Stadium) போலவே காட்சிதரும். இம் மாதிரி இயற்கை எழிலுடன் கூடிய ஒரு பாறையும், அதை ஒட்டிய பரந்த மைதானமும் ஐரோப்பாவிலோ அல்லது அமெரிக்காவிலோ இருந்தால், பிரபலமான சர்வதேச விளையாட்டுக்கள் (Olympic) நடக்கும் இடமாக ஆக்கியிருப்பார்கள்; பிரம்மாண்டமான ராணுவ ஒத்திகைகளுக்கும் பயன் படுத்தியிருப்பார்கள். பென்ஹர் போன்ற சரித்திரப் புகழ் பெற்ற படங்களை உருவாக்க ஏற்ற பந்தய மைதானமாகக் கூட, சினிமா அதிபர்கள் தேர்ந்தெடுத்திருப்பார்கள்-

## மஞ்சிவிரட்டு

இந்த எழில் நிறைந்த பாறையும் சமவெளியும் இவ் வட்டார மக்களைக் கவர்ந்ததில் வியப்பில்லை. இப் பாறையின் சிறப்பை உணர்ந்த இவ் வட்டாரத்தினர், இரு நூற்றாண்டுகளுக்குமுன்பே, இங்கு ஒரு தேசீய விழா நடத்தத் திட்டமிட்டனர். முற்றிலும்

உழவையே நம்பி வாழும் மக்கள் ஆகையால், அவர்களுக்கு ஏற்ற ஒரு விழாவையே தேர்ந்தெடுத்தனர்.

தமிழ் நாட்டில், குறிப்பாக இராமநாதபுரம், மதுரை மாவட்டங்களில் ஏறு தழுவுதல் என்னும் மஞ்சி விரட்டுத் திருவிழா பிரசித்தம். காளைகளின் கழுத்தில் புதுவேட்டிகளைக் கட்டி, பறை, தப்பு, தம்பட்டை, உறுமி முதலிய பல வாத்தியங்களை ஒலித்து, காளைகளை ஓடவிடுவர். அவ்வொலியால் மிரண்ட காளைகள் வேகமாக ஓடும். துணிவுள்ள இளைஞர்கள் அக்காளைகளை மடக்கிப் பிடிப்பார்கள். அவ்வாறு பிடிப்பவன் பராக்கிரமசாலியாக மற்றவர்களால் மதிக்கப்படுவான் உயிருக்கு அஞ்சாமல் மாடுபிடிக்கும் இந்தப் பயங்கர விளையாட்டை மக்கள் ஆயிரக்கணக்கில் கூடி நின்று வேடிக்கை பார்ப்பார்கள். இந்த விளையாட்டை மஞ்சி விரட்டு என்றும், சல்லிகட்டு என்றும், வாடிவாசல் என்றும் மாவட்டங்கள் தோறும் வேறுவேறு பெயரிட்டு அழைக்கின்றனர். தமிழ் நாட்டு மக்கள் இதை ஒரு தேசிய விளையாட்டாகக் கருதி வருகின்றனர்.

குதிரைகளின் வளர்ச்சிக்கு குதிரைப் பந்தயங்கள் தேவை என்று மேனாட்டார் கருதுவது போல், காளைகளின் வளர்ச்சிக்கு மஞ்சுவிரட்டு தேவை என்று மக்கள் கருதுகின்றனர். மஞ்சி விரட்டுக்கென்றே சில காளைகளைத் தேர்ந்தெடுத்து, அவற்றிற்கு நல்ல தீவனம் கொடுத்து, கொழு கொழு என்று வளர்ப்பார்கள் அந்தக் காளைகள் பார்ப்பதற்கு அழகாக, சிவபெருமான் வாகனமாகிய நந்தி பகவான்போல, உயர்ந்த திமிலுடன் கம்பீரமாகக் காட்சிதரும். பழகியவர்களை யன்றி மற்றவர்களைக் கண்டால் பாயுமாறு இக்காளைகளுக்குப் பயிற்சி தந்திருப்பர்.

## காளைகளும் இளங்காளைகளும்

இக்காளைகாளை அடக்கிப்பிடிப்பதற்காக சாரை சாரையாக இளங்காளைகள் பலர் திடலில் திரளு வார்கள். உழவு வேலைகள் முடிந்து, ஓய்வாக இருக்கும் மாசி மாதம் வரும் மகநட்சத்திரத்தன்று இந்த அரளிப்பாறையில் ஆண்டுதோறும் மஞ்சி விரட்டு நடைபெற்று வருகிறது. மஞ்சிவிரட்டு நடைபெறும் அன்று நூற்றுக்கணக்கான வண்டி களில் ஆண்களும், பெண்களும் ஆயிரக்கணக்கில் அங்கு கூடுவார்கள். மற்ற இடங்களில் நடக்கும் மஞ்சிவிரட்டுக்களில், பார்வையாளர்களுக்கு ஆபத்து நேர்வதுண்டு. ஓடிவரும் மாடுகள் சில சமயங்களில் மக்கட்கூட்டத்தில் புகுந்து விடுவ துண்டு. ஆனல் அரளிப்பாறை மஞ்சிவிரட்டில், இவ்வித அபாயம் ஏற்படுவதில்லை. குழந்தைகள் முதல் குடுகுடு கிழவர்கள் வரை, அச்சமில்லாமல் பாறையின்மேல் அமர்ந்து மஞ்சிவிரட்டைக் கண்டு களிக்கலாம். நூறு அடி உயரமுள்ள பாறையில், காலரியில் அமர்ந்திருப்பதுபோல் வரிசை வரிசை யாக அமர்ந்து, ஓடும் காளைகளைக் காணலாம். பார்ப்பவர்கள் எவ்வித இடைஞ்சலும் இல்லாமல், வெகுதூரத்தில் ஓடும் காளைகளையும் காணமுடியும். மைதானம் மேடுபள்ளமில்லாமலும் கரடுமுரடாக இல்லாமலும் சமவெளியாக இருப்பதால், காளை பிடிப்பவர்களுக்கும் வசதியாக இந்த இடம் அமைந் திருக்கிறது. இதனல், பல இடங்களில் வெற்றிக் கொடி நாட்டிய பல காளைகளை இங்கு கொண்டு வருவார்கள்.

## மக்கள் மகிழ்ச்சி

உச்சிவெயிலில், குடைகளைப் பிடித்துக் கொண்டு, ஆண்களும் பெண்களும் குழந்தைகளும்

வண்ணவண்ண ஆடைகள் புனைந்து, வரிசை வரிசையாக ஆயிரக்கணக்கில் அமர்ந்திருப்பது கண்கொள்ளாக் காட்சியாகும். காளைகள் ஓடுவதை யும் அவற்றைப் பிடிக்க இளங்காளைகள் பலர் பின் தொடர்வதையும் கண்டு, கரகோஷம் செய்து ஆரவாரம் செய்வார்கள். இந்த ஆரவாரத்தைக் கேட்டுக் காளைகளும், இளைஞர்களும் உற்சாகம் மேலிட, வெறிகொண்டு ஓடுவார்கள். பாய்ச்சலுக் காகப் பயிற்சி பெற்ற சில காளைகள் ஓடும்பொழுதே திடீரென்று திரும்பி வட்டமிடும். அதை மடக்கச் சுற்றிலும் இளைஞர்கள் நின்று பாய்ச்சல் காட்டு வார்கள். அவர்களை நெருங்கவிடாமல் காளைகள் சீறிப்பாயும். சில இளைஞர்கள் மண்ணைவாரி இறைப்பார்கள். அந்த மண்ணின் புழுதி அடங்கு வதற்கு முன்பாகவே அந்தக் காளைகள் பாய்ந்து, இளைஞர்களைக் கீழே தள்ளிவிட்டு, சிறிது தூரம் ஓடி, மீண்டும் திரும்பி வட்டமிடும். இதைக்காணும் மக்களின் உற்சாகம் கரை புரண்டோடும். ஆரவாரம் வானை எட்டும். இது மேனாடுகளில் நடைபெறும் உதை பந்து விளையாட்டரங்கங்களை நமக்கு நினைவூட்டும். அந்த உதை பந்து விளையாட்டரங்கு களில்கூட ஆண், பெண் கலந்த இவ்வளவு கூட்டத்தைப் பார்க்க முடியாது.

## தின்பண்டங்கள்

கூட்டத்தில் பலவித பண்டங்கள் விற்கப்படும். கூட்டத்தினர் தின்பண்டங்களைத் தின்று கொண்டே விளையாட்டை ரசிப்பார்கள். இளநீரும், கரும்பும், வாழைப்பழமும் இங்கு நிரம்ப விற்பனையாகும். பாறையின் சூடுதாக்காமல் இருப்பதற்காக, இளநீர் மட்டைகளையும், கரும்புச் சக்கைகளையும் தங்கள் விரிப்புகளுக் கடியில் தள்ளி விட்டு, அதன் மேல் அமர்ந்து கொள்வதும் உண்டு. மஞ்சள் நிறச்

சிவந்திப்பூ இக்காலத்தில் அதிகமாகக் கிடைப்பதால், இளம் பெண்கள் ஆசைதீர வாங்கி அப்பூக்களைத் தலை நிறையச் சூட்டிக் கொள்வார்கள். இது அவர்களது அழகை அதிகப்படுத்துவதோடு, வெய்யிலுக்கும் பாதுகாப்பாக அமைகிறது. தைப் பொங்கல் முடிந்ததும் இவ்வட்டார மக்கள் அரளிப் பாறை மஞ்சி விரட்டுக்கான ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கி விடுவார்கள்.

## ஐந்து நிலைநாட்டார்

இந்த மஞ்சி விரட்டு விழாவை, அரளிப் பாறையைச் சுற்றியுள்ள நூற்றுக்கு மேற்பட்ட கிராமவாசிகள் செலவு போட்டு இப்போதும் நடத்தி வருகின்றனர். பல கிராமத்தார்கள் சேர்ந்து ஒரு குழுவாக அமைத்துக் கொள்வார்கள். அந்தக் குழுவை நாடு அல்லது மங்கலம் என்று அழைப்பார்கள். முல்லைமங்கலம், கன்னமங்கலம், சதுர்வேத மங்கலம், சீர்சேர்ந்தமங்கலம், வேலமங்கலம் என ஐந்து குழுக்கள் சேர்ந்து அரளிப்பாறை மஞ்சி விரட்டை ஆண்டு தோறும் நடத்துகின்றனர். இந்த ஐந்து மங்கலத்தாரையும் (குழுவினரையும்) சேர்த்து ஐந்து நிலைநாட்டார் என்று அழைக்கப் படுவர். மாசி மகத்தன்று ஒவ்வொரு மங்கலத்தாரும் அந்தந்த மங்கலங்களின் தலைமைக் கிராமத்தில் ஒன்றுகூடி, தாரை, தம்பட்டை, வாங்கா என்ற கொம்புகளை ஊதிக் கொண்டு, ஆட்ட பாட்டங் களுடன், காளைகளுக்குக் கழுத்திலும் கொம்பிலும் கட்டுவதற்காக புதுத்துணி மூட்டைகளைச் சுமந்து கொண்டு, கால் நடையாகவே பல கல் தூரம் நடந்து அரளிப்பாறையை அடைவார்கள். இப்படி ஐந்து மங்கலத்தாரும் வந்து சேர்ந்த பிறகு தான் மஞ்சி விரட்டு ஆரம்பமாகும். பகல் ஒரு மணிக்கு மஞ்சி விரட்டு ஆரம்பமாகி மாலை நான்கு மணிக்குள்

முடிந்து விடுவது வழக்கம். மரம், செடிகள் இல்லாத பொட்டல் நிலத்திலும் பாறையின் மேலும் தகிக்கும் வெய்யிலில், மக்களை நெடுநேரம் காத்திருக்கும்படி வைக்கலாகாது என்பதற்காக, மஞ்சி விரட்டை பெரும்பாலும் குறித்த நேரத்தில் தொடங்கி விடுவார்கள்.

ஆனால் சீர்சேர்ந்தமங்கலத்தைச் சேர்ந்த நாட்டார்கள் காலதாமதமாகவே வந்து கொண்டிருந்ததால் சில ஆண்டுகளாகவே மஞ்சி விரட்டு குறிப்பிட்ட நேரத்தில் தொடங்க முடியாமலிருந்தது.

## கருப்பன் செட்டியார் வருகை

சீர்சேர்ந்தமங்கலத்தில் முறையூர், சத்துரு சங்காரக்கோட்டை, மாத்தூர், செவல்பட்டி, அய்யாபட்டி, எருமைப்பட்டி முதலிய சிலகிராமங்கள் சேர்ந்திருந்தன. இவற்றிற்குத் தலைமையகம் முறையூர் வள்ளல் சண்முகனாரின் இளவல் கருப்பன் செட்டியார் சீர்சேர்ந்தமங்கலத்தாருக்குத் தலைவராகச் செல்வாக்குடன் திகழ்ந்தார். கருப்பன் செட்டியார் மஞ்சி விரட்டுக்குப் புறப்படுவது ஒரு சிற்றரசர் புறப்படுவது போல வெகு ஆடம்பரமாக இருக்கும். தமது பரிவாரங்களுடன் புறப்படச் சற்றுத் தாமதமாகி விடுவதுண்டு. கருப்பன் செட்டியார் அரளிப்பாறையை அடையும் போது, மக்கள் பேராரவாரம் செய்து வரவேற்பார்கள். இவர் வந்து சேர்ந்தவுடன் மஞ்சி விரட்டுத் தொடங்கி விடும் என்று எல்லோரும் மகிழ்வார்கள்.

கருப்பன் செட்டியார் அழகான எருதுகள் பூட்டப்பட்ட பெட்டி வண்டியில் வருவார். அந்த எருதுகளின் கழுத்தில் கட்டிய சதங்கை ஒலி இன்னிசை எழுப்பும். ஒரு பொதி மாட்டின் முதுகில்

நகரா கட்டப்பட்டிருக்கும். அதைத் தட்டி ஒலி எழுப்பிக் கொண்டு சிலர் முன் செல்வார். வண்டியின் முன்னால் வானளாவப் பறக்கும் அனுமக் கொடியை சிலர் தாங்கிச் செல்வர். சீர்சேர்ந்தமங்கல நாட்டாரைக் கௌரவிப்பதற்காக இந்த அனுமக் கொடி யாரோ ஓர் அரசரால் வழங்கப்பட்டதாம். காளைகளுக்கு வாங்கிய வேட்டி மூட்டைகளைச் சிலர் சுமந்து வருவார்கள். வண்டியிலிருந்தவாறே, காளைகள் கட்டப்பட்டிருக்கும் இடத்திற்கு வந்து மஞ்சிவிரட்டுக்கு வந்துள்ள காளைகளின் மேல் ஒரு கண்ணோட்டம் செலுத்தி விட்டு, கருப்பன் செட்டியார் மைதானத்தின் நடுவில் வண்டியை அவிழ்த்துவிட்டு, அந்த வண்டியின் மேல் ஏறி நின்று கொண்டு மஞ்சுவிரட்டைக் கண்ணுறுவது வழக்கம்.

## கலகமும் கலக்கமும்

1919 ஆம் ஆண்டு மஞ்சு விரட்டின் போதும் இத்தகைய ஆடம்பரங்களுடன் கருப்பன் செட்டியார் அரளிப்பாறைக்கு வந்து கொண்டிருந்தார். இவர் சில ஆண்டுகளாகவே இவ்வாறு காலதாமதமாக வருவது மற்ற நாட்டாருக்குப் பொறுக்கவில்லை. ஆகையால் அவ் ஆண்டு இவர் வருவதற்கு முன் பாகவே மஞ்சிவிரட்டைத் தொடங்கி விட்டனர். நடுவழியில் வந்துகொண்டிருந்த கருப்பன் செட்டியாருக்கு இது புது அனுபவமாக இருந்தது. தான் அவமதிக்கப்பட்டதாக எண்ணினார். இவருடைய ஆட்கள் சென்று இவர் உத்திரவின்றியே அவ்வாறு மஞ்சி விரட்டைத் துவங்கியவர்களை அடித்துவிட்டனர். கருப்பன் செட்டியார் தூண்டுதலால்தான் இவ்வாறு அடித்துவிட்டார்கள் என்று முதலில் மஞ்சுவிரட்டைத் துவக்கிய நாட்டார்கள் தவறாக எண்ணினார்கள். இதற்குப் பழிவாங்க வேண்டுமென்று கூட்டமாகக் கூடி கருப்பன்

செட்டியாரை நோக்கி வந்தார்கள். தம்மிடம் முறையிடுவதற்காகவே அவர்கள் வருவதாகக் கருப்பன் செட்டியார் எண்ணினர். கூட்டத்தினர் அருகில் வந்ததும் கருப்பன் செட்டியார் மீது கற்களை எரியத்தொடங்கினர். திடீரென்று தாக்கப்பட்ட கருப்பன் செட்டியார் தமது ரிவால்வரைத் தேடினர். அதில் ஓரிரு தோட்டாக்களே இருந்ததால், இவ்வளவு பெரிய கூட்டத்தை அதனல் சமாளிப்பது சிரமம் என்று நினைத்து, வண்டியிலுள்ள திண்டு களைக்கொண்டு கற்கள் தம் மீது படாமல் தடுத்துப் பார்த்தார். அப்படியும் ஒரு கல் எப்படியோ இவர் நெற்றியில் பட்டுவிட்டது. மயக்கங்கண்டு சாய்ந்து விட்டார். செட்டியார் இறந்துவிட்டதாகக் கருதி கல்லெறிந்தவர்கள் ஓடிவிட்டனர். பலத்த காயத் துடன் ஊர் திரும்பினர். நாட்டுத்தர்பாரில் திளைத்த கருப்பன் செட்டியார் தன்னைத் தாக்க முற்பட்டவர் களின் கொட்டத்தை அடக்க பல முயற்சிகள் செய்தார். அந்த மஞ்சிவிரட்டையே நிறுத்திவிட வழிகளைத் தேடினர். மஞ்சிவிரட்டு நடத்தும் பெரிய மைதானத்தையே விலைக்கு வாங்கி சொந்த மாக்க முயன்ருர். இந்தச் சமயத்தில் சில நடுநிலை யாளர்கள் வந்து இவர் கோபத்தைத் தணித்து தெரியாத்தனமாக நடந்துவிட்ட காரியத்தை மன்னிக்கும்படி கோரினர். அதற்காக அபராதம் செலுத்துவதாகவும் கூறினர். பிறகு சாந்தமானர். அபராதத்தொகையை அரளிப்பாறை கோவிலுக்கே அளிக்கும்படி செய்து, அந்தச் சம்பவத்தை மறக்க முயன்ருர். ஆனலும் தமது வாழ்வில் முதன் முதலில் ஏற்பட்ட எதிர்ப்பினுல் மனம் உடைந்து அதே கவலையினல் ஓராண்டிற்குள் அதாவது 1920இல் காலமானர்.

மீளாத்துயர்

சண்முகனாரின் வலக்கை போலிருந்த கருப்பன் செட்டியார் மறைவு சண்முகனாரை மீளாத்துயரில் ஆழ்த்தியது. அவர் உடல்நிலை சீர்கெட்டது. அது வரை அடங்கி யிருந்த பாரிசநோய் மேலோங்கியது. வாரி வாரி வழங்கிய வலது கை வழங்காது போயிற்று. அது மட்டுமா? இரவலரைக் கண்டு இரங்கிய இவரது இரு கண்களும் பார்வை இழந்தன. மதுரையில் மீனாட்சி அருளால் ஞானக் கண் பெற்ற வர் ஊனக்கண்களை இழந்தார். வலது கை வழங் காத போதும் இவர் வள்ளன்மையை விடவில்லை; கண் பார்வை இழந்த போதும் கண்ணோட்டத்தை விட்டாரில்லை. "நல்லகுடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும் இல்லை எனமாட்டார் அன்றோ?"

கண் பார்வை இழந்த பிறகும் இலக்கியங் களையும், செய்தித்தாள்களையும் பிறரைப் படிக்கச் செய்து தெரிந்து கொள்வார்.

"ஆற்றங்கரையின் மரமும் அரசு அறிய வீற்றிருந்த வாழ்வும் விழும் அன்றோ? உடல் வலிமை கெட்ட அளவிலேயே தொழில் வளமையும் குன்றியது. தொழில் ஒரேயடியாகப் படுத்துப் போ யிற்று. கடன் பெருகியது. பலவித சிக்கல்கள் சண்முகனாரைத் தொடர்ந்தன. விடம்கொண்டு வாழ்ந்தாலும் வாழலாம் கடன்கொண்டு வாழலாமா? சண்முகனார் தம்மிடமுள்ள பெருமதிப்புள்ள வைர நகைகளையெல்லாம், எடுத்துக்கொண்டு, தான் கடன் பட்டிருந்த பிரபல தனவணிகத் தனவந்தர் ஒரு வரிடம் சென்றார். "இவற்றை விற்பதற்கு எனக்கு நாணமாயிருக்கிறது. அதோடு, என் நிலையை உணர்ந்தவர், தக்கவிலை தர முன்வரமாட்டார்கள். தாங்கள் நல்ல விலைக்கு விற்றுக்கொடுங்கள்.

உங்கள் பாக்கியை வரவு வைத்துக்கொண்டு மீதியைத் தந்து, என் நாணயத்தைக் காப்பாற்றுங்கள்'' என்று அந்த நகைகளை ஒப்புவித்தார். அந்தோ! வள்ளலாரின் நாணமும் நாணயமும் அவரைக் கெடுத்தது. பேராசை கொண்ட அந்தச் செல்வரால் பிழை நேர்ந்தது. தமது பாக்கிக்கே அவ்வளவு நகைகளும் போதவில்லை என்று கூறி அந் நகைகளைக் கபளீகரம் செய்துவிட்டார் அப் புண்ணியவான். இச்செய்தியைக் கேட்ட வள்ளல் திடுக்கிட்டார்.

கடன் கொடுத்தவர்கள் பொறுக்கத் தயாராக இல்லை. ஆதலால் தமது சொத்துக்களையும் கடன் பட்டியலையும் நீதிமன்றத்தில் ஒப்புவித்தார். கோர்ட்டார் ரிசீவரை நியமித்தனர். தொல்லைகளிலிருந்து விடுதலை பெற்ருர்.

வழக்கு மன்றம் ஏருமல் ஊருக்கெல்லாம் வழக்குத்தீர்த்த வள்ளல் இறுதிக் காலத்தில் வழக்கு மன்றம் ஏற நேர்ந்தது. அந்தப் புண்ணியத்தைக் கட்டிக் கொண்டனர் சில பேராசைக்காரர்கள்.

## முடிவு

முழுநிலவுக்கு முதல்நாள். ஆனித் திருநாளில் முறையூர் மீனுட்சி சுந்தரேசுவரர் தேரேறி வீதி வலம் வரும் திருநாள். 1930-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் ஒன்பதாம் நாள். பகலுணவுண்ட பிறகு, மறுநாள் நடைபெற வேண்டிய தீர்த்தவாரி மண்டகப்படி பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். வள்ளல். பிறகு சற்றுக் கண் அயர்ந்தார். மாலை மூன்று மணிக்கு இவரை எழுப்பினுர்கள். இவர் துயில் எழவில்லை. மீளாத் துயிலில் மூழ்கியவர் எழுவதும் உண்டோ? தூக்கத்திலேயே துன்ப மணுவும் இன்றி இவர் இறைவனடி சேர்ந்து விட்டார்.

இவர் அமரரான செய்தி அறிந்து, ஊரார் விரைந்து தேரை இழுத்து நிலைசேர்த்தனர். பிறகு ஊரே திரண்டுவிட்டது. அலங்காரம் செய்யப்பட்ட பல்லக்கிலே வள்ளலை அமர்த்தி, தப்பு, தம்பட்டை, ஒயிலாட்டம் முதலிய சிறப்புக்களுடன் அடக்கம் செய்தனர்.

பூத உடல் மறைந்தாலும் புகழ் உடலுடன் பூதலம் உள்ளளவும் வாழ்கின்ருர் சண்முகனுர். பெருந்தகையாளருக்கு இறப்பும் உண்டோ?

"நறைஊறும் மாலையினுல் நற்புலவர் சூழ்ந்துபுகழ்
முறையூரின் காவலனுய் முத்தமிழைக் காப்பவனுய்க்
கறைஊறும் கண்டன்அடி காதலிக்கும் சண்முகனும்
பொறைஊறும் கொடைவள்ளல் புகழ்நீதி வாழியவே!"

வள்ளன்மை வாழ்க!

முற்றும்





# அனுபந்தம்—1

[இந்நூலின் 20ம் பக்கத்தில் அரசர் நன்றி என்ற தலைப்பில் குறிப்பிடப்பட்டுள்ள குத்தகைப் பத்திரத்தின் முழுவாசகத்தையும், அசல் பத்திரத்திலுள்ளபடியே சிறிதும் மாற்றமின்றி கீழே தருகிறோம். எண்பது ஆண்டு களுக்கு முன்பு பத்திரம் எழுதும் முறையும், அதில் அமைக்கப்படும் வாசகங்களும், எப்படி இருந்திருக்கு மென்பதற்கு இந்தப் பிரதி ஒரு எடுத்துக்காட்டு. சிவகெங்கை அரச குடும்பத்தினர் இருவருடைய கையொப்பமும், சர்க்கார் பதிவு நிலையத்தில் பதிவு செய்து கொள்ளும் பொழுது குறிப்பிடும் எண் முதலிய வைகளையும், முத்திரையையும் பிளாக் செய்து அவற்றையும் கீழே கொடுத்துள்ளோம்.]

சண்முகனுருடைய சுவிகாரந் தந்தை பின்னைய செட்டியாருக்கு
சிவகெங்கை அரசர் எழுதிக் கொடுத்த குத்தகைப் பத்திரம்

1881-ஷு பிப்ரவரி-மீ 12உ சிவகங்கை ஜமீன்தாரும், உடையணத் தேவரவர்கள் குமாரருமான மறவ ஜாதி ஸ்ரீமது முத்துவிஜயரெகுநாத துரைசிங்க தேவறவர்களாகிய கெவுரி வல்லவ மகாருஜரவர்களும்ஷ ஜேஷ்ட்ட குமாறர் பெரியசாமி யாகிய உடையணத் தேவறவர்களும் திருப்பத்தூர் தாலுகா முரையூறிலிருக்கும் பளநியப்ப செட்டியார் மகன் நாட்டுகோட்டை செட்டி ஜாதி லேவாதேவி வியாபார ஜீவனம் சின்னய்யா செட்டியாருக்கு எழுதி குடுத்த சாசுவத கட்டுக் குத்தகை பத்திரம் என்னவென்றல்

நமக்கு ஷ சிவகங்கை ஜமீன்தாரி கிடைத்த 1287 பசலியில் ஷ ஜமீன்தாரியில் தகுந்த வரும்படியில்லாமலும் அதுனல் கவுறன்மெண்டு பேஷ் கிஸ்துபாக்கி சருகமாயி செல்லாவதற்குபிடமில்லாமலும் இருந்துது. ஷ 87 பசலி 6வது வாயிதாவான மேமீ கிஸ்த்தித் துகைக்காக ரூ. 52500. ஷ பசலி 7வது வாயிதாவான சூன் மாதம் பேஷ்கிஸ்து பாக்கிக்காக ரூ. 10000. ஆக ரூ. 62500 நாம் கெவுரன்மேண் டுக்குச் செலுத்த வேண்டியும் அதற்க்காகவே கலெக்கட்ட றவற்கள் நம்மை நிற்பந்தம் செய்ததில் அதைச் செலுத்த அப்போது ஜமீன்தாறியில் ஐவேஜில்லாமலும் இருந்துது. அதைத் தாங்கள் குடுக்க வேண்டியதாக நாமும் நம்முடைய ஏஜண்டுகளும் தம்மைக் கேட்டுக் கொண்டோம். அதற்க்கு தாம் சம்மதித்து ஷ ரூ. 62500க்கும் நம்மிடம் பத்திரம் பெத்து

கொண்டு ஷெ துகையை 1878 ஞூ த்தில் உகூர்கஜாநா வில் ரொக்கமாயி செலுத்தி வச்சிற்கள். யிது தவிர 1879 ஞூ த்தில் நம்மிட மனவர்த்தி வகையருவுக்கு அவசரமாயி நேறிட்ட சிலவுகளுக்காக ரூ. 10000 கொடுத்து பத்திரம் பெற்று கொண்டிற்கள். மேல்க்கண்ட எல்லாத்துகைகளும் யாதொரு உசிதம் அல்லது லாபம் கேளாமல் சாதாறண வட்டிக்கி கொடுத்து உதவி செயிதீர்கள். ஷெ துகைகள் வாயிதாக் களின் படிக்கி தங்களுக்குச் செல்லாகாதுநாலே அதற்காக ஜமீன் சப்கோர்ட்டு 1879ஞூ அசல் 39—49 இந்த நம்பர்களில் தாங்கள் நம்மிட பேறில் வளக்கிட்டு தீர்ப்பாகி யிருக்கிறதில் மேற்படி தீர்ப்புப்படி வாயிதா கடந்தும் மேற்படி துகையைச் செலுத்துவதற்க்கு யிடமில்லாமலிருப்பதில் யின்னமும் ஜமீன் தாறியைப்பற்றி நடக்குற சீமை அப்பீல் முடிவு வறை ஷெ டிக்கிரித்துகையை வசூலிக்காமல் நிருத்தி வைக்க வேண்டிய தாக நாம் கேட்டு கொண்டபடி சம்மதித்தும் யிருக்குறீர்கள். ஜமீன்தாரியைப் பற்றி பிறிவி கவுன்ஸ்லில் நடக்குற அப்பீல் சிலவுகளுக்காக முன் தம்மிட வகையருப் பேறிடம் வாங்கி யனுப்பி யிருக்கிற துகையைவிட இப்போது ஜாஸ்தியான சில துகையும் நம்மிட மனவற்த்தி வகையரு சிலவுகளுக்காக பல பேறிடம் வாங்கி யிருக்கிற கடன்களை தீர்ப்பதற்கு சில துகையும் வேண்டியிருப்பதில் அதற்க்காக நாளது தேதியில் நாம் தமக்கு எளுதிக் கொடுத்திருக்கிற யிடுகடன் பத்திரத்தில் கண்டபடி ரூ. 18500 நமக்கு யிந்த சமயத்திலும் கடன் கொடுத் தீற்கள். யிவ்விதமாயி ஜமீன்தாரி பேஷ் கிஸ்து பாக்கிக்கும் நமக்கு நேறிட்டிருக்கிற பிரிவி கவுன்ஸ்ல் அப்பீல் சிலவுக்கும் நம்மிட மன வற்த்தி வகையரு சிலவுகளுக்கும் தாங்கள் பல சமயங்களில் பெருந்திறவிய சகாயங்கள் செயிதும் யிந்த சமயத்திலும் ஷெ ரூ. 18500 கடன் குடுத்து உதவி செயிதும் மேல்க்கண்ட எல்லாத் துகைகளையும் நாம் கேட்டுக் கொண்டபடி பிறிவி கவுன்ஸ்ல் அப்பீல் முடிவு வரை வசூல் செயிகுறதில்லை யென்று சொல்லியிருப்பதுநாலே மேல்க்கண்ட எல்லா விதமான உதவிகளின் பிரதி பிறையோஜனங்களுக்காக நம்மால் 1880 ஞூ ஜநவரி மீ 15௨ பிப்பிறவறி மீ 21௨ களுள்ள ரிஜிஸ்ட்டற் தஸ்தாவேசுகளின் மூலமாயி 1289 பசலி முதல் 1303 பசலி வரை குத்தகை கொடுத்திருப்பதும் தாம் கைவசம் வைத்து அனுபவித்து வருவதுமான அடியில்க்கண்டமுரையூர் சூரக்குடி 2 கிராமங்களுக்கும் பசலி 1க்கு யேற்பட்டிருக்கிற குத்தகைத்துகை ரூ.5000த்தில் ரூ.2000நீங்க தள்ளிக்கொடுத்து மிதம் பசலி 1க்கு ரூ. 3000 வீதம் பொருப்பு நிஸ்கரிஷத்து தமக்கிது மூலமாயி சாசுவதக் குத்தகையாக பாத்தியப்படுத்திக்

கொடுத்திருப்பதுநாலே மேற்படி கிராமங்களை தாம் சந்ததி பரம்பரையாயும் தானாதி விநிமயவிக்கிறயங்களுக்கு யோக்கிய மாகவும் ஆண்டனுபவித்து கொள்வீருகவும். பேஷ்கிஸ்து பாக்கிகளாக மேற்படி ஜமீன்தாறி யிப்போது ஜப்த்தியா யிருப்பதில் ஜப்த்தி நீங்கும வறை முந்தின குத்தகைத் துகை ரூ.5000 விதம்கலெக்கட்டறவர்களிடத்திலும் ஜப்த்தி நீங்கினது முதல் யிந்த தஸ்தாவேசில் கண்டபடி பசலிகளுக்கு ரூ. 3000 விதம் ஜமீன்தாரிக்கும் செலுத்தி கொண்டு மேற்படி கிராமங் களை தாங்கள் சர்வ சுதந்திரத்துடன் அனுபவித்து கொள்வீ ருகவும் யென்று நம்மிட மனப்பூர்வமாயி சம்மதித்து எழுதி கொடுத்த சாசுவதக் கட்டுக் குத்தகைப் பத்திரம்.

ஷெ. கிராமங்களின் வரும்படிக்கு வருஷாவருஷம் கணக்கு கொடுத்து அதின் ஏற்படுகிற கோட்டு செஸ் மகமை யிந்த வகைக்கித் துகைகள் மேற்படி குத்தகைத் துகைக்கி சம்மந்தப் படாதாகச்சே அதை பிரத்தியேகமாயி வளக்கப்படி செலுத்திவர வேண்டியது.

நான் கெல்கை விபரம்

மதுரை டிஸ்திரிக்கட்டு திருப்பத்தூர் சப்டிஸ்திரிக்கட்டுக்கு சேர்ந்த திருப்பத்தூர் தாலுகாவில்

1. சுண்ணும்பிருப்பு கால் முகவணைக்கும் ஒழுகு யினும் கிராமத்துக்கும் கோட்டை கோயில் சேங்கை கீளகரைக்கும் மாதவருயன்பட்டி கண்மாயுள்வாயிக்கும் நல்லான் குளப் புறவு வடகடப்புஞ்சைக்கும் மேலுள குடியிருப்பு நடுச்சந்திப் பெரும்பாதைக்கும் தோணிப்புறவுக்கும் மேலூர் கண்மாயி வடக்கடைக்கும் வடக்கு சீனிப்பெருமாள் நத்தப்புஞ்சைக்கும் பூதணி வயல் நீற்ப்பிடிக் குத்துக் கல்லுக்கும் ஷெ. குளக்காலுக்கும் எல்கை புளிக்கும் முரையூர் காலாங் கரைக்கும் ஷெ. முகவணைக்கும் கிளக்கு வாசிலையாத்துக் கும் தெற்கு யிதற்க்குட்பட்ட முரயூர் கிராமம் 1க்கு நஞ்சை செய் 192—6—8½ புஞ்சை குறுக்கம் 630.

2. முரையூர் கண்மாயி நீர்ப்பிடிக்கும் குத்துக்கல்லுக் கும் மேலூர் மேனிக்கண்மா யுள்வாயிக்கும் மேர்க்கு துலுக்கன் ஊறணிக்கும் ருத்ரகோடீசுவரர் தேவதாயத்துப் புறவுக்கும் கொத்தன் பள்ளத்துக்கும் மங்கநாயகர் கோயில்

தேவதாயம் முத்துவடுகநாதபுரம் எல்கை புறவுக்கும் தெற்கு யிதற்குட்பட்ட சூரக்குடி கிராமத்துக்கு நஞ்சை செய் 248—8—3 புஞ்சை குறுக்கம் 663—9—1.

[கையொப்பம்]

துரைச்சிங்கமாகிய கெவுரி வல்லவத்தேவர்

பெரியசாமி தேவருகிய உடையனதேவர்




[சண்முகனூர் இளவலாகிய கருப்பன் செட்டியார் குமாரர் திரு. இராமசாமி செட்டியார் தந்துதவிய மூலப்பத்திரத்தின் பிரதி இது.]

# அனுபந்தம்—2

## சண்முகனுர் திருமண வைபவ மங்கல வாழ்த்து

(கொட்டாம்பட்டி கருப்பையாப் பாவலர்)

உலகெலாம் ஈன்ற ஒருமுதல் தாயை
 உமையைமா வழுதிபால் உவந்த
அலகிலாக் கருணைக் கயற்கண்நா யகியை
 அன்பொடு மணந்(து)உறை, துதிக்கைக்(கு)
இலகுவான் களிற்றை வரைகளைத் தனக்(கு)ஓர்
 இடம்எனக் கொண்டுவாழ் இறையைச்
சுலவுறப் பெற்று மகிழ்ச்சிகொள் சோம
 சுந்தரன் திருஅருள் துணையால். 1

கற்பகம் ஐந்து நிலையதா வைகிக்
 கழறுதற்(கு) அரியபல் காட்சி
அற்புதக் கொடைஈந் தால்எனக் கொடுக்கும்
 அகம்உளார் அன்பொடு வாழும்
பொற்புறு தரத்தால் வழுதிமா வரைப்பில்
 பொலிஐந்து நிலைஎனப் புகலும்
நற்புகழ் நாட்டில் பொன்நகர் இணையா
 நவிலவும் உயர்எழில் நகரம். 2

அவனியில் எவரும் அறைந்திடும் முறைகேட்(டு),
 அக்கணம் அவர்அவர் மனத்துள்
உவகைமீக் கொளச்செய்(து) உதவலால், இதுவே
 உயர்முறை யூர்என உரைக்கும்
தவம்மலி நகரில் வணிகர்மா மரபு
 தழைத்திட வந்(து)அவ தரித்தோன்;
பவம்அற மாற்(று)ஊர் ஆகிய மாற்றூர்ப்
 பரன்ஐஞ்ஞூற் றீசனைப் பணிவோன்: 3

திருஅமர் குளத்தூர் வகுப்பினைச் சார்ந்த
 திருவினன்; திருவின்அன்(று) இகழும்
உருவமன் மதனும் ஒப்பனே? என்னும்
 உசிதமா அழகுறும் உருவன்;
கருவம்மிக் குடையார் களைஎலாம் அடக்கிக்
 கழறுதன் வசமுறக் கணிப்போன்;
தருஎன ஈகைப் பெயர்ச்சொலை வினையின்
 தகுதிஆக் கிடவல்ல தருமன்;

முன்னையாம் செய்த தவம்இது என்ன
மொழிந்து.சார்ந் தவர்க(கு)அருள் முறையில்
அன்னையாம் தரத்தன்; அன்பின்ஆ தரத்தன்;
அணிபுயம் உயர்ந்தபூ தரத்தன்;
கல்நையா நிற்கும் முலையினர் கருத்தன்
கற்றவர் கருத்தினுங்(கு) அருத்தன்;
சின்னையா வணிக சிகாமணி தவத்தில்
திகழ்நவ மணிநிகர் சேயன். 5

அகத்தியன் குன்று முனிஎனக் கல்வி
அதனிலும் தேர்ச்சியா அமைந்த
மகத்துவன்; நூறு மகத்தனும் நிதிசார்
வடதிசைக் கோனும்உள் மதித்தே
சகத்திடை விழைந்தும் தமக்(கு)உரு ததினால்
தம்மனம் வெட்கி,அந் தரமாப்
புகத்,தமை நிகர்த்த கயிலைபொன் மேருப்
பொருப்பென ஓங்கிய தனத்தன்; 6

பரவுதன் எழிலில் பயன்இலை என,வேள்
பார்த்(து)இர தத்தைமாப் பரியை
விரவுபுன் காற்றுப் பறந்திட விடுத்து,
விதித்ததன் உருவையும் விலக்கித்,
தரைமிசை அனங்கன் ஆகவே, எவர்க்கும்
தலைத்தெரி யாமல்சஞ் சரிக்கில்,
உரவுறு புகழ்சேர் இவனைநேர் யாரே
உவமை? என்(று) உவப்புறும் அழகன்? 7

பாரகம் முழுதும் பார்த்(து) அகம் களித்துப்,
பரவிடும் காட்சிஇன் பசுகன்;
தாரக னேஎன்(று) அடுத்தவர்க்(கு)-அருள்உ
தாரகத் தன்; பரி சனத்தன்;
வாரக முலையின் மயக்கிடும் மடவார்
அகத்தையும் மயக்கிடும் மார்பில்
சீரக மாலை வகித்(து), அரன் தாளில்
சீர்அகம் மாலைஆர் செம்மல்; 8

மனதுமா மகிழ்ச்சி மருவஇக் கடல்சூழ்
வையகம் முழுவதும் அறியத்
தனதுமா சமுக வித்துவான் எனஎன்
தனைஉவந்(து) ஆதரித்(து) அருள்விற்
பனதுரை; சிறிதும் பயன்இல்லின் மொழிகள்
பகர்ந்திடாப் பண்பினுல் உயர்ந்து,
வினவுதற்(கு) அரிய பெரும்புகழ், கீர்த்தி,
மெய்ம்மையில் விளங்கிய மெய்யன்; 9

அஞ்சுவான் தருவும் அஞ்சுவான் தருசீர்
ஆர்புகழ்க் கொடையினர் யார்க்கும்
மஞ்சுவான் பொழியும் பரிசுபோல், பரிசு
மகிழ்ச்சியின் ஈந்திடும் வள்ளல்;
கஞ்சம்நேர் கரத்தன்; கருணைஆ கரத்தன்;
களிப்புநீர் நிறைந்தசா கரத்தன்;
விஞ்சுகண் ணோட்டம் அணிகலம் ஆக
விளங்கிய வித்தகக் கண்ணன்; 10

தாலமேல் தோன்றில், புகழொடு தோன்றல்
தகுதிஎன்(று) உணர்ந்(து)இசை தழைக்கும்
சீலம்ஏற்(று), அன்பு, சுகுணம்ஆ தியசீர்
திகழ்தரக் கொண்டநல் கொண்டல்;
பாலமேல் விழிகொள் பசுபதி, உமை,மா
பன்னிரு கரத்தனைப் பணிந்து,
மூலமா மறையின் முறைவழா(து) இன்பம்
முன்னவே தொழுதுவாழ் முதல்வன்; 11

ஒருவனுக்(கு) அமைத்த உருவம்போல் மற்றொன்(று)
உஞற்றிட அறிகிலா(து) உழன்று
மருமலர்த் தவிசில் வீற்றிருப் பவனும்
“மன்னும்நான்குதலையன்” என்னத்,
திருவுறும் உருவப் படங்கள்ஒன் றினைப்போல்
திகழ்பல இயற்றிடும் செயலால்,
தருஉயர் இலண்டன் சித்திரக் கலைதேர்
சங்கத்தும் ஒருமுத்தாய்த் தழைத்தோன்; 12

முத்தமிழ்ச் சங்கத் தலைவனும் மலைவாய்
முன்புகப் பலவையம் காத்து
முத்(து)அமிழ் சங்கத் தலைவன்என்(று) எவரும்
மொழிந்திட வளர்தரும் முறையால்,
உத்தம குணத்தன்; ஒப்பிலா மனத்தன்;
உவமைஇல் மேனிபொன் வணத்தன்;
தத்துவம் உணர்ந்தார் தமக்கும்ஓர் தலைமைச்
சண்முக நாமமா தவனே; 13

தலம்புகழ் முறையூர் தனில்வளர் அருணா
சலவணி கேந்திரன் தவத்தில்,
வலம்புரி உயிர்த்த மணிஎன வந்த
மகள்உ(ண்)ணா முலைஎனும் மாதைக்
குலம்புரி முறையில் குறைபடா(து), அன்பு
குலவுறு திருமணம் குறித்து,
நிலம்புரி தவமே, வேதியர் கணித்த
நிறைசுப முகூர்த்தநிச் சயமே. 14

பிலவவை காசி இருபத்து மூன்றில்,
பிறங்குநாள் புதன்இர(வு) அதனில்,
நலம்மலி வழுதி கொடிவளர்ந்(து) இலங்கும்
நல்சுப லக்கினத் தினிலே,
புலவர்,அந் தணர்கள், உறவினர், ஆன்றோர்
புனிதஆ சிகள்பல புகன்று
மலர்மழை பொழிய, வாத்தியம் முழங்க
மணந்தவன் யாவரும் வாழ்த்த. 15

மதுரையை நிகர்த்த முறைசைமா நகரின்
மகிழ்வொடு மணந்தஎம் கோமான்
குதிரையில் ஏறி வந்ததோர் பவனிக்
கோலம்,மா தசரதன் மதலை
மிதிலையின் மறுகில் சனகியை மணந்து
விளங்(கு)உலாப் போந்ததை நிகர்க்கும்.
இதுவரை இந்த வகைஉலாப் போந்தார்
எவர்கொலோ இப்புவி இடத்தில்? 16

மங்கல முகூர்த்த மணவிழாச் சிறப்பை
வழுத்துதற்(கு) எளிதன்(று).ஆ யினும்நான்
இங்குநேர் கண்ட தினில்சிறி(து) உரைப்பன்.
இயல்வல்லீர்! மகிழ்வொடு கேண்மின்!
தங்குபொன் இந்த்ர விமானமோ? தனதன்
தனதுபுட் பகவிமா னமதோ?
எங்கள்பூ மான்தன் மணவிழாக் காட்சிக்(கு)
எய்திஆங்(கு) இலங்குமண் டபமே! 17

அந்தமண் டபச்சீர் அறைவ(து)என்? அதனில்
அமர்ந்(து),உயர் இயல்இசை வல்ல
சந்தஇங் கிதத்தோ(டு)எவர்களும் புகழச்
சங்கீத நெறிமுறை வழாது,
நந்தல்இல் வாணி கரத்(து)அமர் வீணை,
நல்எழில் இலங்குதம் பூர்,மா
சுந்தரச் சுரகத் தொடுபிடில், எங்கும்
துலங்கும்ஆர் மோனியம், இன்னும், 18

தரைபுகழ் பால சரஸ்வதி உரிய
தவிலொடு நாகசு ரம்சீர்
உரைபெறு மோர்ச்சங் குடன்பல இயங்கள்
ஒருவரும் இசையொடும் உவகைக்
கரைகெந்(து) எழுந்த கடல்எனப் பெருகிக்
களிப்புறச் சுதிவழி கனிந்து
புரைஅகல் அமுதப் பொலி(வு)எனப் பாடிப்
புகழ்ந்தவர் மகிமைஎன் புகல்வேன்? 19

பாடுவர் ஓர்பால்; பணிசெய்வர் ஓர்பால்;
பரிவொடு சோபனம் பாடி
ஆடுவர் ஓர்பால்; அளவிலார் நெருங்கி
அனைத்தையும் கண்(டு)உவந் திடுவான்
கூடுவர் ஓர்பால்; குலவுவர் ஓர்பால்;
கோதிலா(து) அமைந்தசிங் காரம்
நாடுவர் ஓர்பால்; நலமெலாம் ஓர்வான்
நவின்றிடற்(கு) எவர்வலார் நாட்டில்? 20

கல்வியில் சிறந்த வள்ளுவர் நூலில்
கண்டு, கேட்(டு), உண்(டு)உயிர்த்(து) உற்றுப்
பல்விதத்(து) அறியும் ஐம்புல னுந்தான்
பகரும்ஒண் தொடிகணே உளஎன்(று)
எல்லையில் மொழிந்த(து) இத்திரு மணத்தின்
இன்பம்முற்(று) அறிகிலா இயல்பே!
வல்லமைப் புலவீர்! செப்புமின்! —இந்த
மணவிழாக் காட்சியின் மகிழ்வே! 21

அன்னமும் சொனமும் ஆடையும் வந்தோர்க்(கு)
அன்பொடு கோடிகோ டியதாய்
இன்னமு தெனவே ஈத்(து) உவந் திடுபே
ரின்பத்தை இயம்புதற்(கு) எளிதோ?
முன்னர்சண் முகவேள் தெய்வகுஞ் சரியை
முறையொடு மணந்(து), உல கினிலே
நல்நய இன்பம் காட்டக்கண்(டு) இங்கு
நாம்கண்டு களித்தது நலமே. 22

இத்தனை மகத்வ மணவிழாக் காட்சி
இன்பத்தை ஈந்தஎம் இறையாம்
உத்தம மகிபற்(கு) உலகினில் தீர்க்கா
யுள், புகழ், கீர்த்தி, நல் செல்வம்,
புத்திர பாக்யம் இவைகள்மேன் மேலும்
பொற்பொடு பெருகிட அருள்வான்,
நத்தன்மால் மருகன் முருகனை ஏத்தி
நாடொறும் பணிகுவம் நாமே. 23

[திருமண நிகழ்ச்சிகள் என்ற தலைப்பில் இந்நூலின் 34வது பக்கம் முதல் 37வது பக்கம் வரை இவ்வாழ்த்துப் பற்றிய விளக்க உரை இடம் பெற்றிருக்கின்றது.]

## அனுபந்தம்—3

[சண்முகனுரைப் பெற்றெடுத்த தந்தை, இராமன் செட்டியார் அமரரான போது, கொட்டாம்பட்டி கருப்பையாப் பாவலர் மனமுறுகிப் பாடிய சரமகவிதா மஞ்சரி தோன்றி, இற்றைக்கு அறுபத்தாறு ஆண்டுகள் கடந்து விட்டன. பாவலரின் இதய பூர்வமான சோகத்துடிப்பும் அவரின் புலமை நயமும் மறைந்தவருக்கு சாத்தப்படும் பூ வளையமாக அமைந்துள்ளது. இது காப்பாற்றி வைக்கப்பட வேண்டிய ஒரு கவிதை இலக்கியமாகும். அதை எண்ணி மூன்ருவது அனுபந்தமாக இங்கே இணைத்துள்ளோம்.]

### இராமன் செட்டியார் சரம கவிதா மஞ்சரி

### நேரிசை வெண்பா

சீர்விளம்பி, மேடமதி, தேதிஇரண்(டு), உத்ராடம்,
ஆர்புதன்,பின் பக்கம்வரும் அட்டமியே—பார்புகழும்
தென்முறையூர்ச் சிமான்எம் சிராம நாதன்அரன்
நல்முறைப் பதம்புகுந்த நாள்.

### கொச்சகக் கலிப்பா

### விளம்பி ஆண்டு

வளம்பதியும் முறையூரில் வணிகர்குலத்(து) அவதரித்(து)எம்
உளம்பதியும் இராமநா தேந்திரன்பொன் உலகுபுக
விளம்பிவரும் என்(று)அறிந்தோ மேலோர்இவ் ஆண்டிற்கு
விளம்பிஎனப் பெயர்அளித்தார் விரிந்தகடல் புவிமீதே!

### மேடமதி (சித்திரை மாதம்)

மூடமதி யால்காதை முன்அறுத்துச் சுட்டவன்பின்
ஓட,மதி கொண்(டு)உலகின் ஒப்பில்மதி யோ(டு)உலவா
மேடமதி யால்அன்ருே மேன்மைமதி யோர்சள்தினம்
தேடமதிக் கும்சிர்த்திச் சிமானை இழந்ததுவே!

## இரண்டாம் தேதி

ஒன்றாகி எவ்வுயிர்க்கும் உள்ளுயிராய் நின்றசிவன்
தன்தாளை ஏத்தும்உயர் சற்குணசிந் தாமணியின்
ஒன்றான உடல்,உயிரை இரண்டாக்கி னதில்அன்றோ
அன்(று)ஆன தேதியும் இரண்டாக அமைந்ததுவே!

## புதன்கிழமை

இரும்புதனைத் தொட்(டு)எவர்க்கும் ஈந்தாலும், பொன்னாக
வரும்புதுமை மலர்க்கரத்தான் மால்ராம நாதேந்த்ரன்
கரும்(பு)உயிரைக் கொ(ண்)டுசெல்லக் கற்றறிஞ ராய்இருந்தும்
பெரும்புதனே! தூதுவனாய்ப் பெயர்ந்த(து)உனக்(கு)
அறிவன்றே!

## பின்பக்கத்து அட்டமி (அமரபட்சத்து அஷ்டமி)

அன்(பு)அக்கம், அறு(கு)உடையார்க்(கு) அன்றிஒரு
பக்கம்வையா(து)
என்பக்கம் தயைமிகுந்த எழில்உடைய சீமானைப்
பின்பக்கத்(து) அட்டமியே! பெரி(து)உவந்து கொடுசென்றாய்!
முன்பக்கம் வரில்அன்றோ நின்வீரம் முற்றுவதே!

## உத்திராடம்

அறந்தன்னால் புகழ்நிறீஇ அவனியில்இங்(கு) எஞ்ஞான்றும்
சிறந்தநா னுவிதத்தும் சீர்த்திபெறு செல்வனொடு
பிறந்தநா ளாயிருந்தும்,— பேதைஉத்தி ராடமே!—
இறந்தநா ளாகஉனக்(கு) எவ்வா(று) இசைந்ததுவே!

## பாலவாகரணம்

கலிஉருவாய் புலவர்கண்ணில் காட்டாமல் ஓட்டுதற்கே
வலிஉருவாய் வந்(து)ஈந்த மால்ராம நாதமுகில்
கெலிஉருவாய்ந்(து) இருந்தும்அஞ்சா(து) எவர்சூதால்
கிளர்ந்துநீ
புலிஉருஆ யினை!பால வாகரண மே! புகலாய்!

பித்தயோகம்

மத்தமதுக் கொன்றைமுடி மாதேவன் கழல்கள்பர
வித்தமது கீர்த்திஎங்கும் விளக்கியசீர் இராமமுகில்
உத்தம துரைக்(கு)இடர்செய் யோகமே! நீயும்அன்று
சித்தமது வாய்வரநின் சித்தம்என்ன சித்தமதே!

அந்தகன்

சந்தமிகு பழநியப்ப தாருதரு தனையன்என
வந்தபுகழ் இராமநா தேந்த்ரவரோ தயன்உயிரை
எந்தவிதம் கொடுசென்ருய்? இதனல்அன் ரே—சமனே!—
அந்தகன்என்(று) உனை அழைத்தார். அவரேகற் றறிமேலோர்.

அந்தோ!இக் காலத்(து) அமர்இயற்கை என்னென்பேன்!
சந்தான தாருஎனத் தழைத்(து)அன்ன சத்திரம்மி
கும்தானம் விளங்கவைத்த கோமானைக் குவலயத்து
நந்தாத புகழ்ராம நாதனைநீத்(து) இருந்ததுவே!

அறுசீர் விருத்தம்

பார்பூத்த வணிகர்குலம் பண்ணுதவம்
ஓர்உருவாய்ப் பலித்திட் டாங்குச்,
சீர்பூத்த பழநியப்பச் செம்மல்திரு
மகவாகிச் செனித்தே எங்கும்
பேர்பூத்த கற்பகமா ராமநா
தேந்திரனே! பே(று)ஆம் நின்தன்
ஏர்பூத்த மதிமுகத்தை இனிஎந்நாள்
காண்ப(து)? அந்தோ! இயம்பு வாயால்!

பொன்தேடிப் புதைத்(து)எவர்க்கும் ஈயாத
உலுத்தர்எலாம் புவியின் ஆயுள்
பொன்ருமல் இருக்கவைத்துத் தருமமே
உருக்கொண்டால் போல்வந்(து) ஈங்கு
நன்ருகப் பலஅறமும் நாட்டிஉயர்
புகழ்பெற்ற ராம நாதன்
சென்ருன் என்(று) உரைக்கவிதி அயனைமுட்டாள்
பூமன்எனச் செப்ப லாமே!

கற்றவர்கள் கலிஅகற்றும் கற்பகமாய்,
இரவலர்பொன் களஞ்சி யம்மாய்
உற்றநின்ஆ ருயிர்கொண்டோன் தருமனோ?
நடுநிலைமை உடைய னோ?சீர்
பெற்றவனோ? அல்ல.அவன் தென்திசையில்
பசுக்கொல்லப் பிறங்கு கின்ற
கொற்றவனாய் எருமைமாட் டுடன்திரியும்
மடங்கலே குறிக்கின். மாதோ!

வித்தைஆய்ந்(து) அறிவுடையோர் எவர்வரினும்
அவர்ஆவல் விளம்பும் முன்னம்
அத்தைஆய்ந்(து) அளிக்கவல்ல கற்பகசிந்
தாமணியே! அவனி மீதில்,
பத்தைஆர் நின்மக்கள் நால்வரினும்
சேட்டன்எனப் பகரும் கீர்த்தி
முத்தையா முகிற்(கு)உரிய முதுமதிநின்
போல்எவரே மொழிகு வாரே?

மண்முகத்தில் உடல்வைத்(து)எம் மதிமுகத்தைப்
பாராமல் மயங்க விட்டு
விண்முகத்தில் சென்றதென்ன? விளையாட்டோ!
அங்(கு)இருக்கும் மேலோர் எல்லாம்
பண்முகத்தில் பரிந்(து)அழைத்த பான்மைகண்ட
மகிழ்வோ!நின் பாலன் ஆன
சண்முகத்தின் புயக்குரிசில் தனையும்மறந்
தாய்!மறவாத் தகைமை யோனே!

அன்னஎழில் சண்முகக்கோ னெடுயானும்
சேர்ந்(து)இந்த அழகு வாய்ந்த
சென்னைநகர்க்(கு) உற்(று)இருந்த பொழு(து)ஒருநாட்(கு)
அனந்தமுறை செய்தி கேட்பத்
துன்னுபல கடிதம்வரைந்(து) ஊர்க்குவர
அழைத்தஅந்தச் சுகுணம் யார்க்கு
மன்னும்இனி? அறியேனால். இராமநா
தேந்திரச்சீர் மகிப ரேறே!

என்பெயரும் நின்பெயரும் இபற்பெயராக்
கொண்டிருக்கும் இளைய மக்கள்
நின்பெயர்ச்சி யால்என்ன நினைத்துவருந்
துவர்களோ! நிமிட மேனும்
அன்புபிரி யாமனைவி ஆற்றுவளோ!
மற்றையரும் அலமந்(து) ஏங்கப்
பொன்பரவும் உலகமதில் புகுந்திருக்கும்
மாயம்என்னே! புகலு வாயே!

கருப்பணியா விதம்அடியர்க் காக்கும்முறை
சையில்வளர்சொக் கலிங்க மூர்த்தி
திருப்பணியா வையும்முடித்துத் திரும்முனம்
நினைக்கூட்டிச் சிவலோ கத்தின்
இருப்(பு)அணியா வைத்தனன்அங்(கு) என்னதிருப்
பணிசெயவோ? இயம்பு வாயால்!
பொருப்(பு)அணியாக் கியசிர்த்திப் புயராம
நாதேந்த்ரப் பொருள்மிக் கோனே!

கோள்அரியைக் கண்டமத குஞ்சரம்போல்
நின்பகைவர் குடிசை உள்ளே
மீள(அ)ரிய ராய்ப்புகுந்து, வேர்த்(து),உடலம்
நடுநடுங்கி வெருவி நிற்க,
ஆள்அரிபோல் வரும்உன(து)ஒய் யாரநடை
இனிக்காண லாமோ— நல்த
யாளர்யார் நினைஅன்றி ராமநா
தேந்திரனே!—அவனி மீதே!

வெள்ளைக்கா ரரின்அரசு நிலைத்தஇந்தக்
காலத்தில் மிகும்தீ வர்த்திக்
கொள்ளைக்கா ரரினுலே செவிட்டையன்
கோவிலிலே கொண்டு போன
வெள்ளமாம் பொருளையெலாம் நின்போலப்
பரிந்துவந் து)ஆர் விரைந்து கண்டு
கள்ளக்கா வலரைமுற்றும் காப்பிருக்க
விலங்கடித்துக் கடத்துவாரே?

எத்திரத்தர் எந்நாளில், எக்காலத்
தினில்வரினும் இன்ப மாகச்
சத்திரத்தில், தன்மனையில் அமு(து)அளித்தே
உபசரிக்கத் தக்கோய்! நீயும்
அத்திரத்தில் காட்டுவிழி அரம்பையர்கள்
போகம்வேட்(டு) அகன்ருய் கொல்லோ!
சித்திரத்தி னும்திட்டற்(கு) அரியஎழில்
சீராமச் சீர்த்தி யோனே!

வேலிஎல்லாம் கமுகு,கன்னல் மிடையஎல்லாம்
முத்(து) உதிர, வியன்ஆர் பண்ணைச்
சாலிஎல்லாம் விளையும்முறை சைப்பதிசெய்
தவத்தின்வந்த தலைவா! "அன்பு
பாலி!எல்லாம் காப்பதுநின் கடன்"என்றே
கவிவரையப் படிக்கா(து), உற்ற
போலிஎல்லாம் மகிழ்வுறக்கா தலைக்கொண்(டு)ஆள்
பெருந்தகைமை புகலற் பாற்ரே!

மருப்(பு ஐஆம் முலைமடவார்க்கு ஒருமதனு!
வணிகர்குல வண்மை ஓங்கப்
பொருப்பைஆக் கியசிலையான் பொன்அடிக்கே
தஞ்சம்எனப் புகலும் சீர்த்தி
விருப்பைஆர்ந்(து) அவன்கோவில் திருப்பணிசெய்
பத்தியுறு மேலோய்! நின்னால்
"கருப்பையா!" எனஅழைக்கும் கனிந்தமொழி
இனிக்கேட்கக் கடவேன் கொல்லோ!

"சிலைஆரும் நுதல்,கயல்கண் தெரிவைபிள்ளைத்
தமிழ்எனச்சீர் சிறந்த தாய
கலைஆரும் நூல்ஒன்று முறைசைமீ
னுட்சியின்மேல் கழறு வாய்!"என்(று)
உலையாத வாக்களித்த ராமநா
தேந்திரனே! ஒருவா(து), "அன்னு
மலையாரின் துணை"எனநீ வரைகடிதம்
கண்(டு)என்று மகிழு வேனே!

தேன்அடர்ந்த சிரகத்தார் தெரியலாய்!
சீராமச் செம்ம லானே!
கான்நடந்த ஒருராமன் கதையினும்நின்
கதைபெரிய கடலாம். அந்தோ!
நீநடந்தாய் எனக்கேட்டு, நெஞ்(சு)உருகா(து)
ஒதியேபோல் நிற்கின் றேனுல்!
வான்நடந்த புகழுடையாய்! உலகமதில்
யானும்மிகு வல்நெஞ் சேனே!

ஆன்இழந்த கன்(று)என்ன, அர(சு)இழந்த
நா(டு)என்ன, அடர்ந்து நீண்ட
கான்இழந்த கலைஎன்னக், கலைஇழந்த
மதிஎன்னக், கருதிச் சேர்த்த
தேன்இழந்த ஈஎன்னச் செயலிழந்தார்
எனயாரும் தியங்கி ஏங்க
ஊன்இழந்த உயிர்இழந்த உணஇழந்த
மனக்கவலை உரைக்கொ ணுதே!

முன்ஒருசித் திரைவிழாக் காட்சிபெற
அழகுபொலி முதிய கூடல்
நல்நகரில் பலருடன்நீ வந்(து)இருந்த
பொழு(து),அங்கு நாடி வந்த
என்ஒரு வதனம்கண்(டு)அக் கணமே,உள்
அகத்(து)இருந்த இயல்பை ஆய்ந்து.
வன்னமுக மலர்ச்சியுடன் மகிழ்ந்(து)அளித்த
பொருட்பேற்றை மறக்கி லேனே!

நின்உயிர்நீங் கும்தருணம் நெடிதுவான்
முக(டு)அதிர்ந்து நிலைஇல் லாமல்
மின்னியபல் காட்சியினை வியந்(து)ஆய்ந்து
நோக்கில், அந்த விண்ணோர் ஆன
பொன்உலகத் தவர்அழைத்த போதுமுழக்
கியமுரசோ? பொன்வி மானத்
தின்ஒளியோ? எனக்கருதற்(கு) இடம்உள(து).
இராமநா தேந்த்ர வல்லோய்!

உன்னுடலின் உயிர்ப்பிரிவை உணர்ந்(து)இரவி
முன்னரே ஒளிமழுங்கித்
தன்ஒரு விசனக்கடலில் தாழ்ந்தவன்போல்
மேல்கடலில் தாழ்ந்து, காலை
'என்னநடந் ததுவோ!'என்[று] எழுந்துவந்து
பார்த்[து] ஏறி,இறங்கி, ஏங்கி,
மன்னும்முகில் கரும்படம்போர்த்[து] இரங்குவனேல்
எம[து]இன்னல் வழுத்தற் பாற்றோ?

வணிகர்குல மணிவிளக்கே! வள்ளல்எழு
மூவர்புகழ் வாங்க வந்த
தணிவில்பெருஞ் சலதியே! சந்தான
கற்பகமே! சங்கம் ஏந்தும்
மணிமுகிலும் நின்பெயரை வாய்ந்துவந்த
பொழுதும்நின்போல் வந்தோர் யார்க்கும்
துணிவொடுசீர்க் கொடைஈந்து புகழ்பெற்றான்
இலன்எனில்,யார் துணிந்[து]ஈ வோரே?

வேறு

ஈதல் இயையாக் கடையின்அன்றோ
இறத்தல் இனி(து)என்(று) இசைமுப்பால்
ஓத உணர்ந்தாம். அங்ஙனம்நிற்(கு)
உற்ற(து) ஏ(து)?இங்(கு) அறிகில்லேம்.
சாதல் அமைந்த கருத்தென்னோ?
சாற்றாய்! முறைசைத் தடநகர்வாழ்
நீத தரும குணராமா!
நிதிக்கோன் என்ன நின்றோனே!

ஈற்றடி மிக்கு வந்த கலித்தாழிசை

பூஏறி மதுஅருந்தப் பொன்தாது சொரியும்
காஏறி முகில்உறங்கும் முறைசைநகர்க் கண்ஆர்
மாஏறு வணிகர்குல வள்ளல்உயிர் நீப்ப
நாவே(று)இங்(கு) உண்டுகொலோ! நாடுதி!நீ மனமே!
நம்ராம நாதனையே நாடுதி!நீ மனமே!

துறந்தார்க்கும் துவ்வார்க்கும் துணைபுரிவான் உலகம்அதில்
பிறந்தார்க்கும் சொலற்(கு)அரிய பெரும்பேற்றைப்
பெற்(று)எதினும்
சிறந்(து)ஆர்க்கும் புகழ்கொண்ட சீராம முகிலோனை
இறந்தான்என் றுல்,இரங்கார் எவர்கொலோ! புலவீர்!
இரங்காத வல்நெஞ்சர் எவர்கொலோ! புலவிர்!

கண்மணியை வணிகர்குலக் கருமணியைக் கற்றோர்கள்
எண்மணியைப் புகழ்மணியை இறைமணியை அன்பர்-
அகத்(து)
உள்மணியை ஒளிமணியை உயர்ராம நாதேந்த்ர
வண்மணியை இழந்திருக்க மனம்வரும்கொல்! உலகீர்!
வரமணியை இழந்திருக்க மனம்வரும்கொல்! உலகீர்!

தரல்ஆற்றும் கொடைவண்மைத் தரும துரை; அளிகள்
முரல்ஆற்றும் சீரகத்தார் மூன்னுபுய மலையான்;
உரல்ஆற்றும் கழல்மலைகள் உலவும்முறை யூரான்
வரலாற்றின் திறன்அறிந்தும் மறந்திருக்க லாம்கொல்?
மால்ராம நாதன்நல்சீர் மறந்திருக்க லாம்கொல்?

மருஆரும் மலர்ச்சோலை வளர்முறைசைப் பதியான்;
தருஆரும் கரதலத்தான்; தனதன்அன்ன தனத்தான்;
திருஆரும் புயசயிலன்; செயராம நாதன்
வருவான்என்(று) இனியாரும் மகிழ்ந்திருக்க லாம்கொல்?
வணிகர்குல மணிபோயும் மகிழ்ந்திருக்க லாம்கொல்?

தன்ஏந்து மணிமாடம் தனைஏந்தும் முறைசைக்
கண்ஏந்து புகழ்ச்சீர்த்தி கனைஏந்தும் உரவோன்
மண்ஏந்த உடல்நீத்து வான்ஏந்தப் புகுந்தான்.
பண்ஏந்து காவலவர் பாஏந்தற்(கு) இனியார்?
பயன்ராம நாதன்அன்றிப் பாவேந்தர்க்(கு) இனியார்?

ஈகையால் புகழ்ஓங்கி எங்கெங்கும் பரவும்
வாகையான்; வணிகர்குல மால்ராம நாதன்
ஓகையாச் சிவலோகத்(து) உள்இருக்கப் புகுந்தான்.
ஆகையால் கீர்த்தியுள்ளான் அவனேகாண் உலகீர்!
அவன்அன்றி மகிமையுளார் ஆர்உண்(டு)இங்(கு) உலகீர்!

அறம்தாங்கும் கொடைஉடைமை அருமைஉரு எடுத்தே
பிறந்தாங்குப் பிறந்துபல பேறுபெறு பெரியான்;
சிறந்(து)ஆரும் வணிகர்குலத் திருவாளன்; எங்கோன்
இறந்தான்.இங்(கு) இனியாவர் ஈகைஉடையாரே?
இராமமுகில் அன்றிஎவர் ஈகைஉடையாரே?

வண்(டு)ஆரும் கொன்றைமுடி மதிச்சடிலன் தாட்கே
உண்டான பக்திமிகுந்[து] ஊக்கம்விடா[து] என்றும்
கொண்டாடிப் பணிபுரியும் குணராம முகிலைக்
கண்[டு] ஆரும் மகிழ்ச்சிஇனிக் கைகூடும் கொல்லோ?
காணுமல் மகிழ்ச்சிஇனிக் கைகூடும் கொல்லோ?

பொல்லாத மனக்கயவர் புவிமீது பலநாள்
சல்லாப மாய்இருக்கச் சந்தான தருஎன்[று]
எல்லாரும் புகழ்ராம நாதன்உயிர் இழத்தற்(கு)
ஓல்லாத குறைநேர்ந்த[து] உண்டுகொலோ? சிவனே!
ஓதரிய குறைநேர்ந்த[து] உண்டுகொலோ? சிவனே!

அறுசீர் விருத்தம்

கடம்பா டவியின் முளைத்தமுக்கட்
கடவுட் கரும்பைக் கற்கண்டின்
திடம்பா லிக்கும் மொழிக்கயற்கண்
தெய்வக் கனியை முறையூரி
னிடம்,பா வனையாத் தொழுதுவந்த
இராம முகிலின் எழில்வாய்ந்த
உடம்[பு]ஆர் அனலுக்[கு] ஒருவிருந்தாய்.
உற்றுல் மற்[று]என் உரைப்பேனே?

மாற்றுர் எவரும் வணங்கிநிற்க
வைக்கும் திறமை மடங்கலான்;
நீற்றுன் அரிய மலர்அடிக்கே
நிதமும் பணியும் இராமமுகில்;
ஊற்று வளரும் கனதனவான்
உயிரை நீக்கற்[கு] உள்இருந்து
கூற்று[ய்] வளர்ந்த புல்நோயே!
கூறுய்! பலன்என் கொண்டாயே!

கற்ருர் கலியைக் கடத்துதற்கே
கடல்சூழ் புவியில் உற்பவித்தோன் ;
உற்ருர் எவர்க்கும் உள்உறவாய்
ஓங்கு குணவான் ; உவகையுளான் ;
நல்தாள் அரன்பால் பணிராம
நாத முகிலோன் சிவலோகம்
பெற்ருன் ;அவனே நற்பேறு
பெற்ருன் மற்[று]ஆர் பெற்ருரே ?

மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா

அந்தோ,

தேயம் முழுவதூஉம் தேடும் நியாயவான்
சீரும் சிறப்பும் திருவாய்ந்த செல்வமும்
பாரும் விசும்பும் பணிசோம சுந்தரன்
கயல்கண் கோமளக் கனிஒரு பாகத்
தோ[டு]அமர் கோவிலும் ஓங்கும்நல் முறைசைப்
பதிஅர[சு] உற்ருன் அவன்,

அவனே,

நல்லாரால் நல்லான்ஆம் என்[று]ஆரும் சொற்றற்கு
நல்லாருள் நல்லானும் தான்,

வல்லானே,

பூதரத் தோங்கும்நீள் புயராம நாதேந்த்ரன்
சாதலைக் கேட்கத் தயங்கும்என் நெஞ்சன்றே.
சாதலைக் கேட்கத் தயங்கும்என் நெஞ்சாயின்,
ஆதரித்[து] ஆற்றுவார் ஆர்கொலோ ! காணேனே !

அஞ்சுதரு வும்கரத்தே அமைராம நாதேந்த்ரன்
துஞ்சுதலைக் கேட்கத் துடிக்கும்என் நெஞ்சன்றே.
துஞ்சுதலைக் கேட்கத் துடிக்கும்என் நெஞ்சாயின்,
அஞ்சாமல் ஆற்றவல்லார் ஆர்கொலோ ! காணேனே !

சிறந்தபுகழ்ப் பேருடைய சிராம நாதேந்த்ரன்
இறந்ததனைக் கேட்க இரங்கும்என் நெஞ்சன்றே.
இறந்ததனைக் கேட்க இரங்கும்என் நெஞ்சாயின்,
மறந்திருக்க மாற்றவல்லார் ஆர்கொலோ ! காணேனே !

அன்னவன்,

திருஉறை தேகத் தினில்ஆ ருயிரை
வெருஉறக் கொடுசெல் விதம்விதித் திட்ட
அருமறை முதலோன் அரன்மால் ஆதிய
உருமருஉ அறுமுகத்[து] ஒருவ!நீ கேண்மோ!

வனக்கோட்டின்,

எங்கும் நிறைந்தே இருந்தாய்! விரிகதிர்த்
திங்கள் உடுமுதல் சேண்,நிலம், நீர்,வளி,தீ
தங்கும் உருவில் தழுவாநின் ருய்பரனே!
அங்கணஅ! அண்ணு! அடிகேட்கு நீதியோ?

தன்கண்ஏவர் அன்புறினும் தாங்கவல்ல சற்புருடன்;
வன்கணர்பால் தன்கண் அரை மாத்திரைநேரமும்வையான்,
நன்[கு]அணவ அறம்புரியும் ராமநா தேந்திரன்தான்
புன்கண்உற உயிர்நீப்பப் புந்தியது சகிப்பேமே?

நறைமலியும் தொடைமார்பன் நடுநிலைமை உடையபிரான்;
குறைஎதூஉம் அறிவிலான்; குணவாளன்; எம்கோமான்;
அறைதரற்[கு]இங்[கு] அடங்காத அறம்புரிந்த ராமமுகில்
உறையுள்விடு பக்கினன உடல்நீப்பச் சகிப்பேமே?

சங்கரரை உமையோடு தங்குதிரு ஆலயத்தின்
துங்கம்மே வியபணிகள் துரிச[து]அறப் புரிகின்ற
அங்குணு கரமேரு ஆம்ராம நாதமுகில்
இங்[கு]இறந் தான்என்னில் எங்ஙனம் சகிப்பேமே?

ஆதலால்,

பல்கால் உன்தன் மலர்க்கால் பணிகுதூஉம்
செல்கா லத்தின் திறன்விதி வழியே
சென்ருன் என்னத் தேறினும் அன்னேன்
நன்ருச் செய்த நல்அறம் முதல்பல
சத்திரச் சாலை, தடம்,மடம் ஆதியும்
எத்திறத்தானும் இறையும் குறைபடா[து]
ஓங்கிப் பல்க உவன்தரு மக்களால்
பாலித்திடவே பலிக்கும்நல் பக்தியும்
சீலமும் தயாள சிந்தையும் குடிகொண்[டு]
அவர்களும் அன்னோர் அதிகச் செல்வமும்
புவனம் அதனில் பொலிவொடு சீர்பெற்[று]
அளவிலாப் பல்லாண் டாக வாழ்க!
உளம்மகிழ்ந்[து] அருளுதி! ஒப்பிலாக் கருணைக்
கடலே! கடலில் கைவேல் விடுத்த
அடலே[று] அனைய அறுமுக! வரத!
அப்ப! அடியவர் அகத்[து]உறூஉம்
வைப்பே! குறவர் மகள்கிழ வோனே!

## வாழ்த்து

### நேரிசைவெண்பா

பார்வாழ்க! செந்தமிழ்ப் பாவாழ்க! நன்குமுறை
யூர்வாழ்க! சீர்வணிகர் ஓங்குகுலத்—தோர்வாழ
வந்தஇரா மன்,புகழ்சேர் மக்கள்,அவர் செல்வங்கள்
சந்ததமும் வாழ்கமிகத் தான்!

---